Regd. No. 2975. ஸ்ரீ:

# SRI RAMANUJAN

*Editor*: P. B. ANNANGARACHARYA, L. KANCHEEPURAM.

# ஸ்ரீ ராமாநுஜன் 230

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 6 ஜீவியச் சந்தா ரூ. 116.



பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்



ஆழ்வாரெம்பெருமானார்ஜீயர் திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி *
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி* —ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1968 பிப்ரவரி௴ பிலவங்க௵ மாசி௴

# ஸ்ரீ ராமாநுஜன்-230.







சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 20 | ப்லவங்கஞு மாசிமீ 1968 பிப்ரவரி | ஸஞ்சிகை 2 |
|---|---|---|


## நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி-4.

(அன்பில் திருப்பதி)

**போற்றிசெய வோர்குடைக்கீழ்ப் பொன்னுடு மிந்நாடும்**
**நாற்றிசையு மாண்டாலும் நன்கில்லை—தோற்றமிலா**
**எந்தையன்பி லாதி யிணைத்தா மரையடிக்கே**
**சிந்தையன்பி லாதார் சிலர்.**

| | |
|---|---|
| தோற்றம் இலா எந்தை | பிறப்பிலியான லோக பிதாவும் |
| அன்பில் ஆதி | அன்பிலென்னுந் திருப்பதியிலுறைகின்ற ஆதி புருஷனு மான |
| இணை தாமரை அடிக்கு | பெருமானுடைய உபய பாதார விந்தகங்களுக்கு |
| சிந்தை அன்பு இலாதார் சிலர் | மாநஸிகமான பக்தியைச் செலுத்தாத சிலர், |
| பொன் நாடும் நால் திசையும் இ நாடும் | தேவ லோகத்தையும் நான்கு திக்கின் எல்லையிலுள்ள இம் மண்ணுலகத்தையும் |
| போற்றி செய ஓர் குடை கீழ் ஆண்டாலும் | பலர் கொண்டாட ஒற்றைக் குடையின் கீழிருந்து ஆளப்பெற்றாலும் (அதனால் அவர்கட்கு) |
| நன்கு இல்லை | யாதொரு நன்மையுமில்லையாம். |

*** அன்பில் திருப்பதியிலுறையுமெம்பெருமானது திருவடிகளில் பக்தியைச் செலுத்தாதவர்கள் எத்தனையுயர்ந்த செல்வங்களை ஆளப்பெற்றாலும் அதனால் ஒரு பேறுமில்லை யென்றதாயிற்று. (அன்பு-இல், அன்பில்.) இல்— இருப்பிடம். அன்புடன் எழுந்தருளியிருக்குமிடம்(அல்லது)அன்பு தோற்ற எழுந்தருளியிருக்குமிடம் என்பது கருத்து. எம்பெருமான் எந்தத்தலத்திலெழுந்தருளியிருந்தாலும் அன்புடன்தான் எழுந்தருளியிருப்பது;அன்பில்லாமல் ஓரிடத்திலு மிருக்ககில்லான். திவ்ய தேசங்களுக்கு“உகந்தருளினநிலம்” என்றே வ்யபதேசமுள்ளது. பிள்ளை லோகாசாரியர் முமுக்ஷுப்படியில் த்வயப்ரகரணத்தொடக்கத்தில்“இருக்கும்நாள் உகந்தருளினநிலங்களிலே ப்ரவணனாய்”என்றும், ஸ்ரீவசனபூஷணத்தில் ப்ரபன்ன தினசர்யையில் “உகந்தருளின நிலங்களில் ஆதராதிசயமும்” என்றும் “உகந்தருளின நிலங்களை யநுஸந்

தித்தால்" என்றும் இங்ஙனே பலவிடங்களிலருளிச்செய்திருப்பது காணலாம். இவற்றுக் கெல்லாம் முலமாகத் திருமங்கையாழ்வார் திருநெடுந்தாண்டகத்தில் * தானுகந்த ஆரெல்லாம் தன்தாள்பாடி*என்றருளிச் செய்திருப்பது அநுஸந்தேயம், ஆக,ஸகல திவ்யதேசங்களுமே'அன்பில்'என்னத் தக்கவையாயிருக்க, விசேஷித்து இவ்வொரு திவ்யதேசத்தை'அன்பில்'என்பதேன்? என்று சங்கிக்குமவர்கள் 'ஜலஜம்' பங்கஜம் இத்யாதி பதங்களை நினைப்பது; யோகரூடம் என்றபடி.

நேரற்றமிலா எந்தை— பிறப்பில்லாத ஸ்வாமி யென்றபடி. கண்ணபிரான் கீதையில்*பஹூநிமே வ்யதீதாநி ஜந்மாநி* என்றும்*ஜந்ம கர்ம ச மே திவ்யம்* என்றுமருளிச்செய்கிருன். வேதங்களோ*ஸஉச்ரேயாந்பவதி ஜாயமாந:*என்றும் *அஜாயமாநோ பஹுதாவிஜாயதே* என்றும் ஓதிவைத்தன. ஆழ்வார் வாய்திறக்கும் போதே *எந்நின்ற யோனியுமாய்ப்பிறந்தாய் இமையோர் தலைவா!* என்கிருர். *பிறந்தவாறும்*என்று சொல்லி ஆறுமாஸம் மோஹித்துக் கிடந்தாரென்கிருர்கள் ஆசாரியர்கள். இப்படியிருக்க ''தோற்றமிலா வெந்தை''என்றது எங்ஙனம்? *உலகினில் தோற்றமாய்நின்ற சுடரே! *என்ற ஆண்டாள் ஸ்ரீஸூக்தியோடும் விரோதிக்கின்றதே! என்னில்; ஒரு விரோதமுமில்லை. கருமமடியாகப் பிறக்கிற நம்மைப் போல் பிறவாதவன் என்பது கருத்து. *ஸம்பவாமி ஆத்மமாயயா* என்கிற கீதாச்லோகத்தில் மாயாசப்தத்திற்கு ஆதிசங்கராசாரியர் அபார்த்தம் செய்துகொண்டு பகவான் பிறவாமலே பிறந்தவன்போல மாயங்காட்டினுனத்தனை யென்று எழுதிவைத்தார்; இதுவன்று பொருள், இதன் உண்மைப்பொருளுணர்ந்த பராசர முனிவர் ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில்*இச்சாக்ருஹீத-அபிமதஉருதேஹ:* என்று பணித்தார். ஆகவே மாயயா என்பதற்கு 'இச்சயா' என்பதே பொருளென்த் தேறுவர் பெரியோர். நம்பாஷ்யகாரர் அருளிய பொருளும் இதுவேயாகும். ஆக, தோற்றமிலாவெந்தை யென்றதுகொண்டு கலங்கவேண்டா வென்று நிகமிக்கின்றோம்.

இத்திருப்பதியைத் திருமழிசையாழ்வாரொருவரே மங்களாசாஸனம் செய்தவர். நான்முகன் திருவந்தாதியில் *நாகத்தணைக்குடந்தை வெஃகாத் திருவெவ்வுள், நாகத்தணையரங்கம் பேர் அன்பில் * என்ற பாசுரம் சிந்தனை செய்யத்தக்கது. *

---

# அன்பர்கள் கவனிக்க வேண்டிய அறிக்கை

ஸ்ரீராமாநுஜன் சென்ற (229) இதழில் ஸம்ப்ரதாயஸாம்ராஜ்யம் என்கிற வொரு நூல் தொடங்கி இருபதுபக்கங்கள் வெளியிட்டோம். ஆனல் அதனை எல்லாப் பத்திரிகைகளிலும் சேர்த்து வெளியிடவில்லை. ஏனென்றல், அதிலுள்ள விஷயங்களை அவகாஹித்துக்கொள்வதற்கு வடமொழியறிவு மிகவேண்டியிருத்தலால் அஃதுள்ளவர்களான அதிகாரிகளுக்கு அனுப்பும் பத்திரிகைகளில் மட்டுமே அதனைச் சேர்த்து வெளியிட்டோம். அந்தநூல் அவ்வளவோடு முடிவு பெறவில்லை. தொடர்ந்து வெளிவரவேண்டிய பெரிய நூலாதலால் அதன் தொடர்ச்சி இச்சஞ்சிகையிலும் வெளிவருகின்றது; மேலும் தொடர்ந்து வெளிவரவிருக்கின்றது. இப்போது இதனை முந்தின இதழில் போலல்லாமல் எல்லார்க்குமே கிடைக்கும்படி எல்லாப்பத்திரிகைகளிலுமே சேர்த்து வெளியிடுகிறோம். இப்போது இதனை வாசிப்பவர்கள் கீழ்ப்பகுதியையும் [அதாவது 1முதல் 40 பாராக்களையும்] வாசிக்க விரும்பினல் 25 பைசா ஸ்டாம்பு அனுப்பி நமக்குத் தெரிவித்தால் அப்பகுதியை யனுப்பிவைப்போம்.......* ஸம்ப்ரதாயஸாம்ராஜ்யமென்கிற இந்நூலானது ஸ்ரீ உ வே, மதுராந்தகம். வீரராகவாசாரியர்ஸ்வாமி யென்கிற வித்வானுடைய (ஸம்பிரதாயஸுதா) என்கிற சுவடிக்கு மறுப்பாகத் தோன்றியது என்பதை அன்பர்களுக்கு அறிவித்து வைக்கிறோம்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

சென்னை ஸ்ரீவைணவமகாசங்கத்தினர்

# நாற்பத்திரண்டாவது ஸ்ரீவைணவமகாநாட்டில்

ஸ்ரீமத்காஞ்சிமகாவித்துவான், ஜகதாசாரியஸிம்மாஸனதிபதி

பிரதிவாதி பயங்கரம், ஸ்ரீ அண்ணங்கராசாரிய சுவாமிகள்

''ராஷ்டிர வித்துவான்''

விருது பெற்றமைக்குப் பாராட்டி அளித்த

# உபசார இதழ்

**கசடறக் கற்ற காஞ்சிப் பெரியீர்!**

''கண்ணன் கழலிணை நண்ணும் மனம் உடையீர்! எண்ணும் திருநாமம் திண்ணம் நாரணமே !''. என்ற ஆழ்வாரின் அமுத வாக்கைச் சிரமேற்கொண்டு சேவை புரிந்துவரும் ஸ்ரீ வைணவ மகா சங்கத்தினராய அடியோங்கள் இவ்வாண்டு! இந்தியப் பேரரசினர் தங்களுக்கு ரஷ்டிர வித்வான் எனும் விருது அளித்தமை அறிய, மட்டற்ற மகிழ்ச்சி அடைகின்றோம்!

**நிகரில் புகழீர்!**

அயர்வறுமமரர்கள் அதிபதியின் துயரறு சுடரடி தொழுதேத்தும் திவ்யப் பிரதிவாதி பயங்கரப் பரம்பரையில் தோன்றி. மணத்துடன் முளைக்கும் திருத்துழாய் போல, இளமைப் பருவம் தொட்டே புலமைப் பொலிவுடன் விளங்குவதுடன்; அரை நூற்றாண்டுக்கும் மேலாகச் சொல்லாலும், எழுத்தாலும் தாங்கள் புரிந்து வரும் அரிய உயரிய ஸ்ரீ வைணவத் தொண்டு நானிலமும் போற்றுவதாகும்! வட மொழி, தென்மொழிகளோடு அமையாமல் தெலுங்கு, இந்தி மொழிகளிலும் தேர்ச்சி அடைந்து; இந்நான்கு மொழிகளையும் சக்கரங்களாக்கித் தாங்கள் செலுத்தும் ஸ்ரீ வைணவப் பிரசாரத் திருத் தேரின் சுவடு படியாத நாடும் உண்டோ! நகரமும் தான் உண்டோ! வடிவழகும், வாக்கழகும், ஏட்டில் வரியழகும் கூடிச் சேர்ந்தும், சிறந்தும் மிளிர்வது தங்களுடைய அசாதாரணமான மேன்மையாகும்

**அச்சில் அறிவு மழை பொழியும் அண்ணரே!**

பின்புள்ளோரும் பெரும் பேறு அடையும் வகையில், மிக்க கனிவுடனும் கவனத்துடனும் ஸம்ஸ்கிருதம், தமிழ், தெலுங்கு, இந்தி மொழிகளில் தாங்கள் வெளியிட்டுள்ள நூல்கள், ஏடுகள் இவைகளின் வரிசையினை எண்ணிப்பார்த்தால்; இறும்பூதெய்துகின்றோம்! இந்நூல்கள் அத்தனையையும் பார்த்து, இவை ''ஒருவரால் ஒரு மனித ஆயுளில் சாதித்தருளிய சாதனைகள்! என்பதை நினைக்கும்போது; மலையினை நிகர்த்த இம்மாபெரும் சேவை ஆசாரிய கடாட்சத்தின் அருள்தான்; எனத்தேறி நிற்கின்றோம்! தங்கள் சொல்லழகை வரிவடிவில் ஏடுகள் சுமப்பது போல்; ஒப்பற்று விளங்கும் தங்கள் உபன்யாசங்களின் ஒலிவடிவையும், இனியாவது தப்பாமல் ஒலிப்பதிவு செய்து வைப்பது, மிகமிக உயரிய சேவையாக அமையும்

## தேசம் புகழும் தேசீய வித்தக!

இந்தியப் பேரரசினர், நம் ஜனாதிபதியின் மூலம் தங்களுக்கு "ராஷ்டிர வித்வான்" என்னும் சிறப்பு விருதும், ஆயுள் வரை ஆண்டுதோறும் ரூபாய் ஆயிரத்தைந் நூறுசன்மானமும் அளித்துள்ளது மிக்க பொருத்தமானது என்பதை எவரும் ஒப்புக்கொள்வர்! இதனால் இந்தியப் பேரரசும், இவ்விருதுமே போற்றுதலுக் குரியவையாயின என்று கூறுவதும் பொருத்தமுடையதாகும்! தங்களைக் கவுரவிக் கும் பாக்கியம் பெற்றமைக்கு இந்தியப் பேரரசையும், தங்களுக்கு அணிசெய்வான் அமைந்த இவ்விருதினுக்கும் எங்கள் பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்ளு கிறோம்!

## பிரதிவாதிகளுக்குப் பயங்கரரே! பல்லாண்டு வாழ்க!

சடகோபன் முதல்தாயாகவும் நம் இராமாநுசன் மொய்ம்பால் வளர்த்த இதத் தாயாகவும் வளர்ந்த இப்பராங்குச. பரகால யதிவர யதீந்திர ப்ரவண தரிசன த்தின் சீர்மையையும் மேன்மையையும் காப்பதற்கே வாழ்க்கை நடாத்திவரும் தங்களுக்கு ஸ்ரீ வைணவ உலகம் மிகப் பெரிதும் கடமைப்பட்டுள்ளது! பண்தரும் மாறன் பசுந்தமிழ், ஆனந்தம் பாய்மதமாய் விண்டிடும் வேழமாகவும்; *கலிமிக்க செந்நெல் கழனிக் குறையல் கலைப் பெருமான் ஒலிமிக்க பாடலை உண்டு நும் உள்ளம் தடித்து அதனால் வலிமிக்க சீயமாகவும் தாங்கள் திகழ்ந்து, பல்லாண்டு பல்லாண்டு ஸ்ரீ வைணவ ஸ்ரீயுடன் இனிது எழுந்தருளியிருக்க அருளும் படி விண்ணோர் நீள்சிகர விரையார் திருவேங்கடத்து அண்ணன் அடிகளைத் துதிக் கின்றோம்!

இங்ஙனம் அடியோங்கள்

உப்புட்டூர் ஆழ்வார் செட்டியார்
ராமாநுஜ கூடம் சென்னை-1
பிலவங்க, ஆண்டு மார்கழித்திங்கள்.
கீழ்வானம், 23-12-1967

ஸ்ரீ வைணவ மகா சங்கத்தினர்

---

ஸ்ரீரஸ்து

## காட்டுமன்னார் ஸன்னிதியில் ஸம்ப்ரோக்ஷணம்

ஸ்ரீமந்நாத முனிகளுடையவும் ஆளவந்தாருடையவும் திருவவதாரஸ்தல மான காட்டுமன்னார் ஸன்னிதியில் கோபுரப்ராகாரமண்டபாதி ஜீர்ணோத்தாரணத் திருப்பணிகள் பலவாண்டுகளாக நடைபெற்றுவருவது உலகமறிந்ததே. இத்திருப் பணி ஒருவாறு முடிவு பெற்று ஸம்புரோக்ஷணத்திற்கு நாளிட்டிருக்கிறார்கள். அதா வது தை மீ 24வ அங்குராரோபணமாகி 28 ஆம் தேதியன்று ஸம்ப்ரோக்ஷணமா வதாக நிச்சயித்திருக்கிறார்கள். இவ்விசேஷம் ஸகல ப்ரகாரங்களாலும் லோகோத் தரமாக நடைபெறுமென்று நிர்வாஹகர்களின் பாரிப்பினால் அறிந்து மகிழ்கிறோம். ஸ்ரீவைஷ்ணவர்களனைவரும் குழாங் கூடி யநுபவிக்க வேண்டிய மஹோத்ஸவமிது.

இந்த ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவத்திற்கு ஏறக்குறைய இருபத்தையாயிரம் ரூபாவரையில் செலவாகுமென்று நிர்வாஹகர்கள் திட்டமிட்டிருப்பதாகத் தெரி கிறது. அவரவர்கள் தம் தம் சக்திக்கிணங்க ஆந்தனையும் கைகாட்டியும், கைங்கரி யங்களில் ஸாக்ஷாத்தாக அந்வயித்தும் ஸ்வரூபம் நிறம் பெறுவது நலம். இத்தகைய ஸந்தர்ப்பவிசேஷம் வாய்ப்பதரிது. இது ஆபூர்வமான வாய்ப்பென்னத் தட்டில்லை.

இங்ஙனம்: பத்ராதிபர்

ஸ்ரீ:

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

    



சென்னைத்

திருப்பாவை வித்வத் ஸதஸ்யர்களுக்கு

ஸ்ரீ காஞ்சீ, பிரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசார்ய

ஸ்ரீ வைஷ்ணவ தாஸன் அளிக்கும்

விருந்து.

# திருப்பாவையும்-
# திவ்ய தேசங்களும்

திருப்பாவை யுபந்யாஸகர்களுக்குத் தமிழ் ஸம்ஸ்க்ருதம், தெலுங்கு, ஹிந்தியாகிய நான்கு பாஷைகளிலும் விரிவுரைகளை யளித்து நாற்பதாண்டுகளாக உதவிபுரிந்து வருமடியேனே இவ்வாண்டு
**திருப்பாவை திவ்ய தேசோபந்யாஸகர்களுக்கும்**
இங்ஙனே பேருதவிபுரிய **ஆண்டாள்** நியமனம் பெற்றேன்.

7—1—68 ஞாயிற்றுக்கிழமையானவின்று ஏற்றகலங்கள் நாட்பாசுரமாகப் பிரகடனம் செய்வார்க்குப் போல நமக்கு ஒருமருளும் விளையாதபடி ஆண்டாள் அருள்புரிக.

**7—1—1968**

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.



ஆண்டான் திருவடிகளே சரணம்.

"அஞ்சுகுடிக் கொருசந்ததியாய், ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சிநிற்குந் தன்மையளாய்ப் - பிஞ்சாய்ப்
பழுத்தாளை யாண்டாளைப் பத்தியுடன் நாளும்
வழுத்தாய் மனமே மகிழ்ந்து."

# திருப்பாவையும் திவ்ய தேசங்களும்.

ஸ்ரீமதாண்டவன் ஸன்னிதிககு அடியவர்கள் தம்மடியான் **அண்ணங்கராசாரியன்**
அளிக்கும் விருந்து.

1. **மார்கழித் திங்களில் பரமபதாநுபவம்.** இப்பாட்டில் **நாராயணனே** என்றதை உயிராககொள்வோம். *தமஸ: பரமோ தாதா சங்கசக்ரகதாதர:* என்று மந்தோதரி யால பரம பத நிலயனை நாராயணனைப் போற்றப்பட்ட பெருமாள சங்கசக்ரகதாதரனை அவளது உள்ளததுளளே காட்சி தநதவததனேயே. அப்பெருமான் கண்ணனாக அவதரித்த போது *ஜாதோஸி தேவதேவேச சங்கசகரகதாதர* எனனும்படி அந்தப் பரமபதநாதனே சங்கும் சககரமும் சிரிதத முகமுமாகத திருவவதரித்தபடியால நாராயணனே யென்றவிதில் பரமபத நாதனுடைய அநுபவம பாங்காக அமையும்.

2. **வையத்து வாழ்வீர்காளில் திருப்பாற்கடலநுபவம்.** இப்பாட்டில் *பாற்கடலுள் பையத்துயின்ற பரமனென்பதை உயிராகக்கொள்வோம. திருப்பாற்கடல் அவதாரகந்த மெனப்படுகிறது. *ஏஷ நாராயண: ஸ்ரீமாந் ஸ்ரீரார்ணவ நிகேதந: நாகபர்யங்க முத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராமபுரீம்* என்னும் பிரமாணம ப்ரஸித்தம திருப்பாற்கடலில் நின்றுமே வடமதுரையில் வநது பிறந்தருளினவன் கண்ணபிரான். ஆனதுபற்றியே ஆண்டாள் *கண்ணபிரானடி பாடி* என்னவேண்டிய ஸ்தானததில *பாற்கடலுள் பையத்துயின்ற பரமனடிபாடி* என்றாள். கண்ணபிரானையே தம் திருவுள்ளத்தில் கொண்ட பெரியாழ்வார் *அரவததமளியினோடும அழகிய பாற்கடலோடும்....பரவைத்திரைபல மோதத் தம்முள்ளே பள்ளிகொளவதாக வருளிச்செய்தார். அதனையும இங்கே யிணக்கியநுபவிப்பது.

3. **ஓங்கியுலகளந்தவில் திருக்கோவலூரநுபவம்.** இப்பாசுரம் தொடங்கும் போதே ஓங்கியுலகளநத வுததமனென்று த்ரிவிக்ரமாபதானம் பேசப்படுகிறது. எம்பெருமான் உலகளந்தமூர்த்தியாகப் பல திருபபதிகளில் ஸேவை ஸாதித்தாலும் ஸ்ரீவைஷ்ணவர்கள் திருக்கோவலூரையே முன்னம் நினைக்கவேண்டும். முதலாழ்வார்கள் கூடின இத்தலத்தில் உலகளநத ஸேவை மிகவற்புதம். திருமங்கையாழ்வார் திருநெடுந்தாண்டகத்தில் *மந்திரத்தை மந்திரத்தால் மறவாதென்றும் வாழுதியேல்* என்று திருவஷ்டாக்ஷரப்ரஸ்தாவம் செய்தருளினவுடனே அதன் முக்கியப் பொருளான வ்யாப்தியை யருளிச்செய்ய நினைத்து அதனை உலகளந்த அபதானத்தினால் முதலிக்க விரும்பி அடுத்த பாசுரமான *ஒண்மிதியில் புனலுருவி முழுவதாலும் உலகளந்த விருத்தாந்தத்தையே பேசி அதை ஸேவிக்குமிடங்காட்டவெண்ணி அடுதத பாசுரத்தில் *புலம்பரந்து பொன்விளைக்கும் பொய்கை வேலிப் பூங்கோவலூர் தொழுதும்போது நெஞ்சே!* என்று திருக்கோவலூரிலேயே திருவுள்ளத்தை மூள்வித்தாராதலால் ஆழ்வார்களைப் போற்றுங்குடியிலே பிறந்தார்க்கு உலகளந்தவுத்தமனை நினைக்கும் போதே திருக்கோவலூரநுபவம தன்னடையே ப்ராபதமாகும்.

4. **ஆழிமழைக்கண்ணனில் திருவனந்தபுரத்தநுபவம்.** இப்பாட்டில் * பாழியந் தோளுடைப் பற்பநாபன் * என்ற விடத்து அனந்த பத்மநாபனை யநுபவிக்க ப்ராப்தம். இதில் * வாழவுலகினில் பெய்திடாய் * என்று உலகம் வாழப் பெய்யவேணுமென்கிறது. உலகம் வாழ்வதாவது இடர்களெல்லாம் கெடுவதேயன்றோ. அனந்த பத்மநாபனை யநுப வித்தவர் நம்மாழ்வாரொருவரே ; அவர் அப்பெருமானுக்குப் பாசுரம் தொடங்கும்போதே * கெடுமிடராயவெல்லாம் * என்கிறார் * எழுமையுமேதஞ்சாரா * என்கிறார். * தீரும்நோய் வினைகளெல்லாம் * என்கிறார். இங்ஙனே இங்ஙனே நாம் வாழும் வகையைப் பேசினபடி யாலே வாழ வுலகினிற் பெய்திடவேண்டும் பாசுரத்தில் இடராயவெல்லாம் கெடுத்து வாழ் விக்கத்தோன்றிய அனந்தபத்மநாபனை யநுஸந்திப்பது பாங்கு.

5. **மாயனைமன்னில் வடமதுரையநுபவம்.** இப்பாட்டில் * வடமதுரை மைந் தனை * யென்று கண்டோக்தியாகவே வடமதுரையின் ப்ரஸ்தாவமுள்ளது. வடமதுரை விபவத் திருப்பதியாக மட்டுமன்றிக்கே அர்ச்சைத் திருப்பதியாகவும் கொள்ளத் தகுதியுடைத்து. எங்ஙனேயென்னில் ; நம்மாழ்வார் திருவாய்மொழியில் ஒன்பதாம் பத்து முதற்பதிகம் முழு வதும் * வடமதுரைப் பிறந்தவன் * என்கையாலே விபவத்தோடு அர்ச்சையுங்கலந்த அநு பவமாகக் கொள்ளத்தகும். * மதுரா நாம நகரீ புண்யாபாபஹரீ சுபா, யஸ்யாம் ஜாதோஜகந் நாத: * என்கிற பௌராணிக சுலோகத்தையுங்கொண்டு இனிமை பெறவநுபவிப்பது.

6. **புள்ளுஞ்சிலம்பினகாணும் திருவண்வண்டூரநுபவமும்.** இப்பாட்டில் * வெள்ளை விளிசங்கின் பேரரவங் கேட்டிலையோ * என்ற சந்தையை உயிராகக்கொள்வது. திருவண்வண்டூரைப் பாடினவர் நம்மாழ்வா ரொருவரே. * வைகல் பூங்கழிவாய் * என்கிற ஒரு பதிகமே. அதில் * அலர்மேலசையுமன்னங்காள்.* என்று புள்ளினங்களை விளித்துத் திருவண்வண்டூர்க்கு அடையாளங் கூறுமிடத்து * விடிவை சங்கொலிக்குந் திருவண்வண் டூர் * என்று சங்கின் பேரரவத்தையே கூறினர் ஆழ்வார். சங்கானது ப்ரணவாகாரமா யிருக்கும். அகார உகார மகாரங்கள் சேர்ந்தது ப்ரணவம். திருவண் வண்டூர்ப்பதிகத்தில் * அடிகள் கைதொழுது * என்கிற பாசுத்தில் அகாரத்தை முன்னிட்டும், * உணர்த்தலூட லுணர்ந்து * என்கிற பாசுரத்தில் உகாரத்தை முன்னிட்டும், * மின்கொள் சேர்புரிநூலென் கிற பாசுரத்தில் மகாரத்தை முன்னிட்டும் அருளிச்செய்ததுபோல இப் பாசுரத்திலும் * அரி யென்ற பேரரவம் * உள்ளம்புகுந்து * முனிவர்களும் * என்பவற்றில் அகார உகார மகாரங் களைச் சேர்த்துப் பேசியிருப்பதை நினைப்பது. அக்ஷரப்பொருத்தம் மட்டு மன்றியே அர்த்தப் பொருத்தமும் இரண்டிடங்களிலும் மேதாவிகளால் உய்த்துணரத்தக்கது.

7. **கீசுகீசில் திருவாய்ப்பாடியநுபவம்.** ஏற்கெனவே திருவாய்ப்பாடியை யநுப வித்த வொரு மஹா பக்தர் * உத்காயதீநாம் அரவிந்தலோசநம் வ்ரஜாங்கநாநாம் திவம் அஸ்ப்ருசத் த்வநி:, தத்நச்ச நிர்மந்தநசப்தமிச்ரிதோ நிரஸ்யதே யேந திசாம் அமங் கலம் * என்றார். ஸுப்ரஸித்தமான இந்த சுலோகத்தில் ஆய்ச்சிகளின் பாட்டொலி, மத்தின லோசை படுத்த தயிரொலி, (தத்நச்'ச) என்கிறவிடத்தில் அநுக்தஸமுச்சயபரமான சகாரத்தினால்—கடையுமிடைச்சிகளின் ஆபரண த்வநியுமாகிய இவ்வொலிகள் பேசப் பட்டன. இப்பாட்டிலும் அவையே யென்று விரித்து அநுபவிக்க.

8. **கீழ்வானத்தில் திருவத்தியூரநுபவம்.** திருவத்தியூரென்பது ஸ்ரீஹஸ்திசைலம். இப்பாட்டில் தேவாதி தேவனைச் சென்று நாம் சேவித்தால் என்பது உயிரான சொல். தேவாதி தேவனென்பது தேவப்பெருமாளையே. திருப்பாவையில் புள்ளுஞ்சிலம்பின காண் தொடங்கிப் பத்துப் பாசுரங்களினால் ஆழ்வார்கள் பதின்மர்க்கும் திருப்பள்ளி யெழுச்சி பாடினதாக நிர்வஹிக்குமடைவில் இப்பாட்டில் நம்மாழ்வாரையுணர்த்துவதாக விரிவான நிரூபணம் செய்திருக்கிறேன். அவ்வாழ்வார் ப்ரதமப்ரபந்தத்தை இமையோர் தலைவா என்று தொடங்கியும், சரமப்ரபந்தத்தை அயர்வறுமமரர்களதிபதியென்று தொடங்கியும் தேவப்பெருமாளையே பேசினரென்கிற விசதாநுபவங்களை இங்கே இணக்கிக் கொள்வது.

9. **தூமணிமாடத்தில் திருக்கடிகையநுபவம்.** திருக்கடிகையென்பது கடிகாசல மெனப்படுகிற சோளஸிம்ஹபுரம். அத்தலத்தைப்பாடுகின்ற திருமங்கையாழ்வார் *மிக்கானை* என்கிற பாசுரத்தில் * மறையாய் விரிந்த விளக்கை * என்று விளக்காகப் பாடினார். குடத்திலிட்ட விளக்கென்றும் குன்றிலிட்ட விளக்கென்றும் ஆசாரியர்கள் அருளிச்செய்வர்கள். குடத்திலிட்ட விளக்கு அப்ரகாசமாயொழியும். குன்றிலிட்ட விளக்கு சுற்றும் வெளிச்சம் தரும். இப்பாசுரத்தில் * தூமணிமாடத்துச் சுற்றும் விளக்கெரிய * என்றிருப்பதனால் கடிகைத் தடங்குன்றின் மிசையிருந்த மறையாய்விரிந்த விளக்கைக் கொண்டு அநுபவிக்கப் பாங்காகும்.

10. **நோற்றுச் சுவர்க்கமும் திருக்காட்கரையநுபவமும்.** அதிகாரிகள் ஸித்தோபாய ஸாத்யோபாய நிஷ்டர்களென்று இருவகை; இவர்கள் முறையே பரகதஸ்வீகார நிஷ்டர்களென்றும் ஸ்வகதஸ்வீகாரநிஷ்டர்களென்றும் வழங்கப்பெறுவர். * நாயமாத்மாச் ருதியில் * யமேவைஷவ்ருணுதே தேந லப்ய : * என்றோதினபடியே பரமபுருஷனால் வரிக்கப் பட்டவர்களுக்குப் பேற்றில் இழவு கிடையாது. அன்னவர்கள் இனி நோன்பு நோற்க வேண்டியவர்களல்லர். * தேஷாம் ராஜந் ஸர்வயஜ்ஞாஸ் ஸமாப்தா : * என்றும் * செய்த வேள்வியர்வையத்தேவர் * என்றும சொல்லுகிறபடியே நோன்பு நோற்று முடித்து ப்ரஹ்மானந் தாநுபவம் பண்ணுமவர்களாயிற்று அவர்கள். இப்பாட்டின் முதலடியில் அதுவே சொல்லு கிறது **நோற்று** - கிருதக்ருத்யர்களாகி, **சுவர்க்கம் புகுகின்ற** - * யஸ்த்வயா ஸஹ ஸ ஸ்வர்க்க: நிரயோயஸ் த்வயா விநா * என்கிற பிராட்டிவசனத்தில் தேறுகிற ஸ்வர்க்க சப்தார்த்தமான நித்யஸம்ச்லேஷஜநித மஹானந்தத்தையநுபவிக்கின்ற என்று பொருளாகை யாலே மேலே சொன்ன உத்தமாதிகாரியைத் தெரிவிக்கும் பாசுரமிது. இதில் திருக்காட் கரையநுபவம் எங்ஙனேயென்னில்; அத்திருப்பதிக்கு நம்மாழ்வாரிட்டருளிள பதிகத்தில் * வாரிக் கொண்டுன்னைவிழுங்குவன் காணிலென்று, ஆர்வுற்ற என்னையொழிய என்னில் முன்னம் பாரித்து, தானென்னை முற்றப்பருகினான், காரொக்கும் காட்கரையப்பன் கடியனே * என்றுள்ள பாசுரத்தின் இன்சுவைப் பொருளை அடியேனுடைய திவ்யார்த்ததீபிகையில் விளங்கக்காண்க. அன்றியும் * தெருவெல்லாங் காவிகமழ் திருக்காட்கரை * என்று ஆழ்வார் பணித்தபடியே நறுமணம் கமழநிற்கும் திருக்காட்கரை. இப்பாசுரம் நாற்றத்துழாய் முடி நறுமணம் கமழநிற்கும்.

11. **கற்றுக் கறவையும் திருமோகூரநுபவமும்.** இப்பாட்டில் *முகில்வண்ணன் பேர்பாட* என்றதை உயிர்நிலையாகக் கொள்வது, திருமோகூர்த் திருப்பதிக்கு நம்மாழ்வா ரிட்டருளின பதிகமான * தாளதாமரையில் * காளமேகத்தையன்றி மற்றொன்றிலங்கதியே * என்றுள்ளது. அத்தலத்தெம்பெருமானுக்குக் காளமேகப்பெருமாளென்று திருநாமமாகை யாலே திருப்பாவைமுகில்வண்ணனையும் திருமோகூர்க் காளமேகத்தையுங் கூட்டியநுப விப்பது ரஸவத்தரம், முகில் எவ்விடத்தில் பெய்யும்? எப்போது பெய்யும் என்பது ஆர்க்குமறியலாகாது. * நாஸௌ புருஷகாரேண ந சாப்யந்யேந ஹேதுநா, கேவலம் ஸ்வேச்சயை வாஹம் ப்ரேக்ஷே கஞ்சித கதாசந * என்கிற பகவத் காளமேகமும் எந்த அதிகாரியை எப்போது விஷயீகரிக்குமென்பது அறிவரிது. மேகம் ஓரிடத்திலே மின்னும், மற்றோரிடத்திலே பொழியும். ஸ்ரீக்ருஷ்ண மேகம் மதுரையிலே மின்னி ஆய்ப்பாடியிலே பொழிந்தது.

12. **கனைத்திளங்கன்றும் சித்ரகூடாநுபவமும்.** இப்பாசுரத்தில் * சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற * என்பது உயிர்நிலையான சந்தை; பெருமாள் திரு மொழியில் திருச் சித்திரகூடப் பதிகமான * அங்கணெடு மதிளில் *எரிநெடு வேலரக்க ரொடு மிலங்கை வேந்தனின் னுயிர்கொண்டு * என்றதைக் கொண்டு தென்னிலங்கைக் கோமானைச் செற்றதையும், * திருமகளோடினிதமர்ந்த செல்வன்றன்னை * என்றதைக் கொண்டு மனத்துக்கினியானான தன்மையையும் நெஞ்சாரச் சிந்திக்க. அப்பதிகத்தில் * சினமடங்க மாருதியால் சுடுவித்தானை * என்று பெருமாளுடைய சினம் அடங்கிவிட்ட

தாகச் சொல்லிற்று. சினம் உண்டாகித்தானே அடங்கவேணும்; அது திருப்பாவையில் * சினத்தினுலென்பதனுல் சொல்லிற்று.

13. **புள்ளின்வாயும் திருக்குடந்தையநுபவமும்.** இதில் * **பள்ளிக்கிடத்தியோ** * என்று சயனத் திருக்கோலம் அனுபவிக்கப்பட்டது. திருக்குடந்தையில் * ஏரார் கோலம் திகழக்கிடந்தாய் * என்று பள்ளிக்கிடத்தலில் பரமாத்புதமான அநுபவம். மற்றும் வெஃகா முதலிய திருப்பதிகளிலும் பள்ளிக்கிடத்தலுண்டாளுலும் திருமழிசைப்பிரான் சயனத் திருக்கோலப்பதிகளை ஒன்றுசேர்த்துப் பாடுகையில் * நாகத்தணைக்குடந்தை * என்று திருக்குடந்தையையே முந்துற வெடுத்திருக்கையாலும், திருக்குடந்தையாண்டவன் திருமுனபே நிகழும் விண்ணப்பமிதுவாகையாலும் திருக்குடந்தையனுபவத்திற்கே மிக்க பொருத்தமுள்ளது.

14. **உங்கள் புழைக்கடையும் அழுந்தூரநுபவமும்.** இப்பாசுரத்தில் *வாவியுள் செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல்வாய் கூம்பினகாண் * என்று சில நீர்நிலைப் புஷ்பங்களின் தன்மை சொல்லிற்று. * அணியார் வீதியழுந்தூரே யென்ற அத்திருப்பதிகத்தில் * நெல்லில் குவளை கண்காட்ட நீரில் குமுதம் வாய்காட்ட, அல்லிக்கமல முகங்காட்டுங் கழனியழுந்தூர் * எனப்பட்டது. அன்றியும், இங்கு எழுப்பப்படும் நங்கை **நாவுடையாய் !** என விளிக்கப்பட்டாள்; அழுந்தூரிலுள்ளாரைப் பற்றிப் பேசுமாழ்வார் * செந்தமிழும் வடகலையும் திகழ்ந்த நாவர் * என்று நாவுடைமையை நவின்ருர். அன்றியும் * திருவுக்குந் திருவாகிய வென்னு மழுந்தூர்ப்பதிகத்தில் * நெய்யாராழியுஞ் சங்கமுமேந்தும் நீண்ட தோளுடையாய் * என்றது. இங்கு * சங்கொடு சக்கரமேந்தும் தடக்கைய னென்றது.

15. **எல்லே யிளங்கிளியும் திருவல்லிக்கேணியநுபவமும்.** இப்பாட்டில் * வல்லானை கொன்ருனை மாற்ருரை மாற்றழிக்க வலலானை மாயனை யென்றதெல்லாம் * விற்பெருவிழவுங் கஞ்சனும் மல்லும் வேழமும் பாகனும் வீழ * சந்தமல்குழலாளலக்கண் நூற்றுவர்தம் பெண்டிருமெய்தி நூலிழப்ப * என்பது முதலான திருவல்லிக்கேணிப் பதிகத்தின் சந்தைகளைக் கொண்டு அநுபவிக்கப் பாங்காயிருக்கின்றமை காண்க.

16. **நாயகனுயும் திருக்குறுங்குடியநுபவமும்.** இப்பாட்டில் * தூயோமாய் வந்தோம் துயிலெழப்பாடுவான் வாயால் முன்னமுன்னம் மாற்ருதேயம்மா * என்றதை உயிர்நிலையாகக் கொள்வது. **பாடுவான்**—நம்பாடுவான். அவன் திருக்குறுங்குடி யெம்பெருமானைப் பாடுவதற்காக ‘வீணமாதாய நிர்யயௌ.’ வழியிடையில் ப்ரஹ்மரக்ஷஸ்ஸு பிடிக்க வந்தபோது ‘வாயால் முன்ன முன்னம் மாற்ருதேயம்மா !’ என்று சொல்லித் தன்னுடைய விரதத்திற்குப் பங்கம் செய்யவேண்டாமென்று அதன் காலில் விழுகிருன். தப்பாமல் மீண்டுவருவதாகப் பல பல சபதங்களைப் பண்ணித் திருக்குறுங்குடிக்கே சென்று அங்கு நேசநிலைக்கதவம் நீக்கியிருக்கும் நிலையைச் சேவித்து மீள்கிருன்.

17. **அம்பரமேதண்ணீரும் காழிச் சீராமவிண்ணகரநுபவமும்** இப் பாசுரத்தில் * அம்பர மூடறுத்தோங்கி யுலகளந்தவும்பர் கோமானே.’ * என்றதை உயிர் நிலையாகக்கொள்வது. காழிச் சீராம விண்ணகர்ப்பெருமான் * ஒரு குறளாயிருநில மூவடிமண் வேண்டியுலகனைத்து மீரடியாலொடுக்கினவன்.

18. **உந்துமதகளிற்றனும் திருநறையூரநுபவமும்.** திருநறையூரென்பது நாச்சியார் கோயில். ஸ்தலபுராணத்தின்படி நாச்சியாருக்கே ப்ராதாந்யமுள்ள திவ்யதேசமிது. திருமங்கையாழ்வார் பெரிய திருமடலில் * மன்னுமறையோர் திருநறையூர்மாமலைபோல், பொன்னியலு மாடக்கவாடம் கடந்துபுக்கு என்னுடைய கண்களிப்ப நோக்கினேன்...மன்னு மரதகக்குன்றின் மருங்கே, ஓர் இன்னிளவஞ்சிக்கொடியொன்று நின்றதுதான், அன்னமாய் மானய் அணிமயிலாயாங்கிடையே, மின்னுயிளவே யிரண்டாயிணைச் செப்பாய், முன்னுய தொண்டையாய்க் கெண்டைக்குலமிரண்டாய், அன்ன திருவுருவம் நின்றது * என்றநுபவித்தது இங்கே நினைக்கத்தக்கது. * உந்து மதகளிறுபாசுரம் பூர்த்தியாக நாச்சியாரநுபவம்

இதில் * பந்தார்விரலி * என்று பந்தின் ப்ரஸ்தாவமுள்ளது. திருநறையூர்ப் பதிகத்தில் (பெரிய திருமொழி 6—6—8.) * பந்தார் விரலாள் * என்றது காண்க. திருநறையூர்க்கு நூறுபாசுரங்களாகையாலே கொள்ளை கொள்ளையாக அநுபவிக்கலாம். நிர்மூலகாலக்ஷேப பரர்கள் என்செய்வதந்தோ !

19. **குத்துவிளக்கும் திருவிட வெந்தையநுபவமும்.** இப்பாட்டில் * கொங்கை மேல் வைத்துக்கிடந்த * என்றதை உயிராகக்கொள்க திருப்பாவைக்குத் தனியனிட்டருளின பட்டர் இப்பாட்டை ஜீவநாடியாகக்கொண்டுதானே * **நீளாதுங்க ஸ்தநகிரிதட ஸுப்த** மென்றது. இந்த நிலைமையை ஒருவாறு அர்ச்சையில் காணவேணுமானல் திருவிட வெந்தையில்தான் காணலாகும். * திவளும் வெணமதிபோல திருமுகத்தரிவை செழுங்கடலமுதினிற் பிறந்தவவளும் நின்னுகத்திருப்பது மறிந்தும் * என்ற அத்தலப பாசுரத்தையும் * நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த வென்னு மிப்பாசுரத்தையும் ஸமந்வயப்படுத்தி யநுபவிக்க வல்லார் ஆர்கொல் ! நம் ஆண்டவன் அநுபவிக்கலாமத்தனை.

20. **முப்பத்து மூவரும் திருப்பாடகத்தநுபவமும்.** திருக்கச்சிமாநகரில் விளங்கும் பாண்டவதூதன்ஸன்னிதியே திருப்பாடகமென்பது. மிகமிகப் பெரிய திருக்கோலங் கொண டருளினவிடமது. பெரிய திருமொழியில் (9—1—8.) * அரவுநீள் கொடியோனவையுள் ஆசனத்தை அஞ்சிடாதேயிட, அதற்குப் பெரியமாமேனி அண்டமூடுருவப் பெருந்திசை யடங்கிட நிமிர்ந்தோன் * என்று திருமங்கையாழ்வார் அநுஸந்தித்த இதிஹாஸத்திற்கிணங்க அமைந்த திருக்கோலமிது. அதாவது, பாண்டவர்க்காய்த்தூது சென்ற கண்ணபிரானது வருகையையறிந்த அரவுநீள்கொடியோன் [ஸர்ப்பத்வஜனை துரியோதனன்] ஸபா மண்ட பத்தில் பிலவறையொன்று தோண்டுவித்து உள்ளே ஆயுதபாணிகளான மல்லர்களை நிறுத்திப் பொய்யாஸனமிட்டுவைக்க, கண்ணபிரான் அதன்மேல் வீற்றிருந்தவளவில் ஆஸனமுள்ளே யிறங்க, அதனோடு கண்ணனும் உள்ளேயிறங்கி விச்வரூபமெடுத்துத் தன்திறலைக்காட்டி அங்கிருந்த செற்றார்க்கு வெப்பங்கொடுத்த வரலாற்றை இப்பாசுரந்தன்னிலேயநுபவிப்பது. **அமரர்க்கு முன்சென்று** - தேவப்ரக்ருதிகளான பாண்டவர்களுக்காக முன்சென்று ; **கப்பம் தவிர்க்கும்** கம்பமென்கிற வடசொல கப்பமெனத் திரிந்திருப்பதால் அப்பாண்டவர்களின் நடுக்கத்தைத் தவிர்த்தமை சொன்னவாறு.

21. **ஏற்ற கலங்களும் திருக்கண்ணமங்கை திருநாராயணபுராநுபவமும்.** இப்பாசுரத்திற்கு இரண்டு திவ்ய தேசங்கள் அநுபாவ்யங்கள். முறையே அநுபவிப்போம். இப்பாட்டில **பெரியாய் !** என்றதை உயிர்நிலையாகக் கொள்வது. திருக்கண்ணமங்கையைப் பாடுகிற திருமங்கையாழ்வார் தொடங்கும் போதே **பெரும் புறக்கடலை** யென்றார். அப் பெருமைக்குத் தக்கபடி பாசுரங்களையும் பெரியனவாக இட்டருளினார். பதிகத்திற்குப் பலனுரைத்துத் தலைக்கட்டும் போதும் * விண்ணில் விண்ணவராய் மகிழ்வெய்துவர் * என்று பெரியாராகப்பெறுவர் என்றார். மாற்றாரை வலி தொலையப் பண்ணின கண்ணபிரான் *பற்றார் நடுங்க முன்பாஞ்சசன்னியத்தை வாய்வைத்த போரேறே ! * என்றும் *ஸ கோஷோ தார்த்தராஷ்ட்ராணும் ஹ்ருதயாநிவ்யதாரயத் * என்றும் சங்கொலியினல் தொலைத்தான். திருக்கண்ணமங்கைப் பெருமானைவிளிக்கின்ற திருமங்கையாழ்வார் * வெண்சங்கமொன் றேந்திய கண்ண ! * என்றார்.

இனி திருநாராயணபுரத்தையநுபவிக்கும் போது * பெரும் பசுக்களாற்றப்படைத்தான் மகனே ! என்றதை உயிர்நிலையாகக் கொள்வது. யதிராஜஸம்பத்குமாரனே ! என்றபடி. பெரும்பசுக்களான பல்கலையோர்களை ஆற்றப்படைத்தவர் எம்பெருமானார் ; அவர்க்கு மகனே ! என்றபடி. அன்றியும் * உலகினில் தோற்றமாய் நின்றசுடரே * என்றதும் திரு நாராயணபுரத்திற்குப் பெருத்த சான்று. புற்றில் மறைந்திருந்து தோற்றமாய் நின்ற இதி ஹாஸமுணர்க.

22. **அங்கண்மாஞாலமும் திருமாலிருஞ்சோலையநுபவமும்.** இப் பாசுரத்தில் அரசர் அபிமானபங்கமாய் வந்து பணிந்தமை கூறப்படுகின்றது. திருமாலிருஞ் சோலையை

யநுபவிக்கின்ற பெரியாழ்வார் (4—2—7) * கொன்னவில் கூர்வேல் கோன் நெடுமாறன் தென்கூடல்கோன் தென்னன் கொண்டாடும் தென்திருமாலிருஞ்சோலையே * என்று ராஜ பூஜையைப் பேசினார். * இதமிமே சருணுமோ மலயத்வஜம் நருபமிஹ * என்றார் ஆழ்வானும்.

23. **மாரிமலைமுழஞ்சும் திருவரங்கம் பெரிய கோயிலநுபவமும்.** இப் பாசுரத்தில் * உன் கோயில் நின்றிங்ஙனே போந்தருளி * என்றதை உயிர் நிலையாகக்கொள்வது. நம் பெருமாள் ஸன்னிதிக்குக் **கோயி**லென்றே **தனிச்** சிறப்பான ப்ரஸித்தி. இப்பாசுரம் நடையழகு காணவிரும்பிப பேசியது. அதைக்காண்பது கோயிலிலே யாயிற்று. திருவாய் மொழியில் (6—9—3. * ஞாலதது௳டே நடநது நின்றும் * என்ற பாசுரததின ஈட்டில் நம் பெருமாள் நடையழகுபற்றி அற்புதமானதோர் ஐதிஹ்யம் காண்க.

24. **அன்றிவ்வுலகமும் கோவர்த்தனநுபவமும்.** இப் பாட்டில் * குன்றுகுடையா வெடுத்தாய்! குணம்போற்றி * என்னுமடியை உயிராகக்கொள்க. கோவர்த்தனத்தரணத் திற்கு மங்களாசாஸனம் நடைபெறுகிறது, * கொடியேறு செந்தாமரைக கைவிரல்கள் கோலமுமழிந்தில வாடிற்றில, வடிவேறு திருவுகிர் நொந்துமில மணிவண்ணன் மலையுமோர் சம்பிரதம் * எனகிற பெரியாழ்வார் திருமொழிப் பாசுரத்தை ஏடுபார்ததாகிலும் வாசிதது விளககுக. ஆயர்கள் வழககப்படி தேவேந்திரனுக்கு இடுமபூஜையைக் கண்ணபிரான விலக் கும்போது (யஜுர்வேதம் 2-காண்டம். பிரச்னம் 5-ல்) ஓதப்படுகிற * யோ வை ஸ்வாம் தேவதாமதியஜதே ப்ர ஸ்வாயை தேவதாயை ச்யவதே ந பராம் ப்ராப்நோதி பாபீயாந் பவதி * என்கிற வேதவாககியத்தைச் சொலலி விலககினதாக வைத்து அந்த வேத வாககியத்தை நம் நிகமாந்த குருவரா் யாதவாப்யுதயத்தில் * அதியஜேத நிஜாம் யதி தேவதாம் உபயதச் ச்யவதே ஜுஷதேப்யகம், க்ஷிதிப்ருதைவ ஸதேவதகா வயம வநமிஹா நவதா கிமஹித்ருஹா * என்று ச்லோகமாக்கி யுளளார். அதையாவது பன்னியுரைபபது.

25. **ஒருத்தி மகனும் திருக்கண்ணபுராநுபவமும்.** இப்பாசுரத்தில் *ஒருத்தி மகனாய்ப்பிறந்து ஓரிரவிலொருததிமகனா யொளிததுவளர * என்றதைத திருககண்ணபுரப் பாசுரங்களில் கொள்ளை கொளளையாகக் காணலாம். பெரிய திருமொழியில் எட்டாம் பத்து முழுவதும் திருககண்ணபுர மங்களாசாஸனமே. (8-5-1.) * தநதை காலில் விலங்கற வநது தோன்றிய தோன்றல் * என்ற பாசுரததினால் ஒருத்திமகனாய்ப் பிறநததைப் பேசி, * மாரிமாக்கடல வளைவணற்கிளையவன் * எனகிற அடுதத பாசுரததினால் ஒருததிமகனாய் வளர்நததைப் பேசினா. * தாயெடுத்த சிறுகோலுககு உளைநதோடித தயிருண்ட வாய் துடைத்த மைநதனுககு * இதயாதிகளான பல பாசுரங்கள் ஒருத்திமகனாய் வளர்ந்தபோதை யநுபவங்களாம்.

26. **மாலே மணியும் ஸ்ரீவில்லிபுத்தூரநுபவமும்.** இப்பாசுரததில் **ஆலினிலையாய்!** என்றதை உயிராகக் கொள்க. ஸ்ரீவில்லிபுத்தூரெம்பெருமான் வடபத்ரசாயி யென்னுந் திருநாமமுடையனாகையாலே அப்பெருமானை நோககியே ஆலினிலையாய் என்றது. கண்ணனை வடபத்ரசாயியாக அநுபவித்தது ஆண்டாள் மட்டுமன்று, திருத்தநதையாரும் யசோதை வேடமபூண்டு அநுபவிககுமிடதது * பாலகனென்று பரிபவஞ் செய்யேல், பண்டொருநாள் ஆலினிலை வளர்நத சிறுக்கனவனிவன் * என்று கண்ணனை ஸ்ரீவில்லிபுத்தூர்ப் பெருமானாகவே அநுபவித்தார்.

27. **கூடாரை வெல்லும் திருவேங்கடப்பதியநுபவமும்.** இப்பாட்டில் முதலடியையும் ஈற்றடியையும் உயிராகக கொள்க முதலடியில் விரோதி நிரஸனமும். ஈற்றடியில் கூடியிருந்து குளிரும்படியும் சொல்லிற்று. எமபெருமானார் காலத்திலே திருவேங்கமுடையானுககு ப்ரபல விரோதம் விளைய, * அப்பனுககுச் சஙகாழியளிததருளும் பெருமானால் விரோதி நிரஸனம் விளைந்த வரலாறு ப்ரஸித்தம். [**கூடியிருநது**] * ஒழிவில் கால மெல்லா முடனாய் மன்னியிருக்க ஆழ்வார் பாரிததது வேங்கடதத தெழில்கொள் சோதியெந்தை தநதை தந்தைககே. [குளிர்ந்து.] * குளிரருவி வேங்கடம். *

28. **கறவைகளும் ஸ்ரீ ப்ருந்தாவனநுபவமும்.** இப் பாசுரத்தில் **கானஞ்சேர்ந் துண்போம்** என்றதை உயிராகக்கொள்வது. **காநநம்** என்கிற வடசொல் கானமெனக் கடைக்குறையாய்க் கிடக்கிறது காடு என்று பொருள். அதுதான் ப்ருந்தாவனம். அங்குச்சேர்ந்து அநுபவிப்போம், எதையநுபவிப்போமென்னில், கானமென்கிற சொல் தமிழுக்கே உரித்தான இரட்டுறமொழிதலால [கவர்க்கத்ருதீயாக்ஷர] கானத்தைச்சொல்லும். வேணு கானகோஷ்டியிலே சேர்ந்து அநுபவிப்போமென்கை, இவ்விடத்திலே * ஆஸாமஹோ சரணரேணுஜுஷாம் அஹம் ஸ்யாம ப்ருந்தாவநே கிமபி குல்மலதௌஷதீநாம் * சைலோக்நிச்ச ஜலாம்பபூவ...த்வம் தேஷ்வந்யதமாம்பபூவித பவத்வேணுக்வணோந்மாதநே * என்கிற சுலோகங்களை யநுஸந்திப்பது.

29. **சிற்றஞ்சிறுகாலையும் துவராபதியநுபவமும்** இப்பாசுரத்தில் முக்கியமான வேண்டுகோள் * உனக்கே நாமாட்செய்வோம் * என்பது. கண்ணனுடைய தேவிமாரனைவரும் ஆட்செய்தவிடம் த்வாரகையென்று பெரியாழ்வார் திருவுள்ளம் பற்றுகிறார். *பதினாறுமாயிரவர் **தேவிமார் பணிசெய்யத்** துவரையென்னுமதில் நாயகராகி வீற்றிருந்த மணவாளர் * பல்லாயிரம் பெருந்தேவிமாரொடு பௌவமெறி **துவரை** யெல்லாருஞ்சூழ *

30. **வங்கக்கடலும் ஸ்ரீ வில்லிபுத்தூரும்.** கீழ் * மாலே மணிவண்ணனில் ஆலினிலையானுகிற வில்லிபுத்தூருறைவானை யநுபவித்தோம். இங்கு **அணி புதுவை** யென்று வில்லிபுத்தூரையே அனுபவிப்போம். வில்லிபுத்தூரைப் பெரியாழ்வாரும், திருமகளாருமே அனுபவித்தவர்கள். ஆண்டாள் கதையைச் சொல்லிப் பெரியாழ்வாரும், பெரியாழ்வார் கதையைச் சொல்லி ஆண்டாளும் அநுபவித்தார்கள். பெரியாழ்வார் திருமொழியில் (2—2—6.) மின்னனைய நுண்ணிடையார் விரிகுழல்மேல் நுழைந்த வண்டு, இன்னிசைக்கும் வில்லிபுத்தூர் * என்ற பாசுரத்தில் ஆண்டாளுடைய குழலிலே * தூவியம்புள்ளுடைத் தெய்வ வண்டு [நுழைந்த] அபிநிவேசங்கொண்ட வரலாறு வ்யக்தம். நாச்சியார் திருமொழியில் (5—5.) * மென்னடையன்னம் பரந்து விளையாடும் வில்லிபுத்தூர் * என்ற பாசுரத்தில், வேண்டிய வேதங்களோதி விரைந்து கிழியறுத்த பெரியாழ்வார் கதை காணலாம். * அன்னமாய் அன்றங்கருமறைபயந்தான் * என்கிறபடியே ஹம்ஸாவதாரம் அருமறை பயக்க. விஷ்ணுசித்தாவதாரம் * ப்ராஹ 'வேதாந்' அசேஷாந் * என்ன. ஆக, பட்டர்பிரானாலும் கோதையாலுமுண்டான ஏற்றமே ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு அநுபாவ்யம். ...... *

**ஸ்ரீகாஞ்சீ அண்ணங்கராசார்ய தாஸனுடைய**

திருப்பாவை திவ்ய தேசாநுபவ விருந்து

முற்றிற்று.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீரஸ்து.

ஸ்ரீமந் நிகமாந்த மஹா குருவின் எழுநூருண்டு நிறைவு விழாக் கமிட்டியின் ஏழாவது கூட்டத்தின்

# நிகழ்ச்சி அறிக்கை

மேலே குறித்த கமிட்டியானது சென்னை ஸாவுகார் பேட்டைத் தங்கசாலைத் தெரு 97. நெ. நிலயத்தில் ஸ்தாபிக்கப்பட்டு அதன்மூலமாக அடிக்கடி ஆங்காங்கு மஹாஸபைகள் நடத்தப்பட்டுவரும்விஷயம் ஆஸ்திகர்கள் அறிந்ததே. அந்த மஹாஸபைகள் சென்னையில் மட்டுமன்றிக்கே ஸ்ரீவைஷ்ணவர்கள் மிகுந்த இதரப்ரதேசங்களிலும்நடத்தப் பட்டுவருவதும் நாடறிந்ததே. இதுகாறும் ஆறுகூட்டங்கள் நடந்திருப்பது விளம்பரங்களினுல் ப்ரஸித்தமேயாதலால் அவற்றை நாம் இங்கு விவரிக்கத்தேவையில்லை. ஏழவாது கூட்டம் 12.1-68 தேதியன்று இந்தக் கமிட்டியின் நிலயத்திலேயே மாலை 3 மணியிலிருந்து5மணி வரை வெகு சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீமான் உவே.**N.** சடகோபாசாரியர்ஸ்வாமி ஜமீன்தார் **B. R. L.** அவர்கள் தலைமைதாங்கி வெகுநேர்த்தியாக நடப்பித்தார்.பலவித்வான்களும் அட்வகேட்டுகளும் பக்தபாகவதோத்தமர்களும் குழுமியிருந்தார்கள். இக் கூட்டத்தில் இரண்டு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. (1) ஸ்ரீரங்கத்தில் நம்பெருமாள் ஸன்னிதியில் தற்காலம் நடைபெற்றுவரும் திருவத்யயநோத்ஸவத்தில் நாதமுனிகளும் வேதாந்தவாசிரியரும் எழுந்தருளமுடியாதபடிக்கு இவ்விருவிக்ரஹங்களுக்கும் அதர்க்கணமாகப் புண்ட்ரவிபர்யயம் ஏற்பட்டுவிட்டபடியால் புண்ட்ரவிபர்யயம் அற்ற விக்ரஹங்களை ஸ்தாபித்தோ அல்லது ஸம்ப்ரதாயாநுகுணமாக வேறு வழிகண்டோ இக்குறையைநீக்க முயற்சிகொள்ளும்படி தேவஸ்தாநுதிகாரிகளை வேண்டிக் கொள்ளுதல். (2.)வேதாந்தவாசிரியர் நம்பிள்ளை திருவடிகளுடையவும், விசேஷித்துப் பெரியவாச்சான் பிள்ளையினுடையவும் திவ்யஸ்ரீஸூக்திகளைத்தழுவியே பலவும் அருளிச் செய்துள்ளார் என்பது பரமார்த்தமாதலால்அத்தகைய அர்த்தவிசேஷங்களைப் பலபாஷைகளிலும் பிரசுரிக்கவேண்டுதல். ஆக இவ்விரண்டு தீர்மானங்கள் நிறை வேற்றப்பட்டன. **C. R. V.** .... *

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

"கோதை தமிழ் ஐயைந்து மைந்து மறியாத மானிடரை வையம் சுமப்பதும் வம்பு.

நிகழும் பிலவங்கவாண்டு மார்கழித் திங்களில் முப்பதும் தப்பாமே அடியேன் நடத்திய திருப்பாவைப் ப்ரவசனத்திற்கு ஞாபகச்சின்னமாகச் சிறுவியாஸமொன்று வெளியிடலாகிறது. இதன் தலையங்கம்

# கோதை தமிழ் மாலை நறுமணம்.

[ஒவ்வொரு பாசுரத்திலும் ஒவ்வொரு ஸாரார்த்தமுணர்த்துவது.]

**1.** மார்கழித்திங்கள் பாசுரம் பாரோர் புகழவென்று முடிகின்றது. க்க்யாதிலாப பூஜாபேக்ஷையற்றவர்கள் பாரோர் புகழ்வதை எதிர் பார்க்கலாகாது; எதிர்பாரார் கள். புகழவென்றது மகிழவென்றபடி. மகிழ்ச்சியுண்டானாலல்லது புகழ்ச்சி விளையாததலால் புகழ்ச்சிக்குக் காரணமான மகிழ்ச்சியே இங்கு விவக்ஷிதம். "காரணே கார்யோபசாரః" என்றும், "கார்யே காரணோபசாரః" என்றும் வகுத் துக் கூறுவர் வடநூலார்.

**2.** வையத்து வாழ்வீர்கா ளென்னுமிரண்டாம் பாட்டில் 'செய்யாதன செய் யோம்' என்றதற்கு 'சாஸ்த்ரங்களில் செய்யக் கூடாதவையாக மறுக்கப்பட்ட வற்றைச் செய்யோம்' என்றும் பொருள் கூறலாமாயினும் நம் ஆசாரியர்கள் அரு ளிச் செய்யும் பொருள் அதுவன்று; சாஸ்த்ரங்களில் செய்யுமாறு விதிக்கப்பட் டிருந்தாலும் நம்முன்னோர் செய்யாதவற்றை நாம் செய்யோம்- என்பதே உரிய உயரிய பொருள். மணவாளமாமுனிகள் உபதேசரத்தின மாலையில் *ஆசாரியர்கள் அனைவருமுன்னாசரித்த, ஆசாரந்தன்னையறியாதார்—பேசுகின்ற, வார்த்தைகளைக் கேட்டு மருளாதே, பூருவர்கள் சீர்த்த நிலைதன்னை நெஞ்சே சேர்* என்றருளிச் செய்த பாசுரம் இங்கே அநுஸந்தேயம்.

**3.** ஓங்கியுலகளந்த வென்கிற மூன்றாம் பாசுரத்தில் நீங்காத செல்வம் நிறைந் தென்றது ஸாரமானவார்த்தை. ப்ராக்ருதர்கள் எதைச் செல்வமென்று நினைக் கிறார்களோ அது நாளடைவில் நீங்குமதே யொழிய நீங்காமல் நிற்பதன்று; பின்னை எது நீங்காத செல்வமென்னில்; *அதஸ்கரகரக்ராஹ்யம் அபூபதி வசம் வதம், அதாயாதவிபாகார்ஹம் தநமார்ஜய ஸுஸ்திரம்* என்றார்கள் பெரியோர் கள். (அதாவது) கள்ளர்கள் கொள்ளை கொள்ளக்கூடாததும், அரசர்கள் சுங்கம் விதிக்கக் கூடாததும், பங்காளிகள் பங்கு கொள்ளக் கூடாததுமாய் நிலைத்து நிற் கக் கூடிய செல்வத்தை ஆர்ஜிக்க வேண்டிய தென்றபடி. அது கல்விச் செல்வமும் பத்திச் செல்வமுமாகும்.

**4.** *ஆழிமழைக்கண்ணா வென்கிற நாலாம் பாட்டில் வாழவுலகினில் பெய்திடா யென்றது சாதாரண மேகத்தை நோக்கிச் சாதாரண மழையைப் பெய்யச் சொன்ன தன்று. ஆழியுள்புக்கு= உபயவேத ஸாகரத்தினுள்ளே அவகாஹிக்கவல்ல ஆசார்ய மேகத்தை நோக்கி உலகம் உஜ்ஜீவிக்க அருமருந்தான அர்த்தவிசேஷங்களை வாரிக் கொட்டும்படி வேண்டினபடி.

**5.** மாயனைமன்னு பாசுரத்தில் 'வாயினால்பாடி மனத்தினால்சிந்திக்க' வென்ற விது முறைகேடு; வேதத்தில் *மநః பூர்வோ வாகுத்தரః* என்றும், *யந்மநஸாத்யா யதி தத் வாசாவததி* என்றும் ஓதியுள்ளபடி மனத்தினால் சிந்தித்த பிறகேயன்றோ வாயினால் பாடமுடியும்; இம்முறையை மாற்றிச் சொல்லியிருப்பதேன்? என்று சிந் திக்கவேணும். மநஸ் ஸஹகாரமில்லாமல் (பித்தன் போல்) வாய்வந்தபடிபாடினா லும் எம்பெருமானுக்கு உகப்பேயாகுமென்க.

6. புள்ளுஞ்சிலம்பின வென்கிற ஆறும் பாட்டில் 'முனிவர்களும் யோகிகளும்' என்று இருவகுப்பாகச் சொல்லியுள்ளது. யோகிகள் வேறு, முனிகள் வேறு என்றுண் டோவென்று சங்கிக்க நேரும். குணாநுபவநிஷ்டரும் கைங்கர்ய நிஷ்டருமாகிற இரு வகுப்பினரைச் சொன்னபடி. பரதாழ்வானையும் இளையபெருமாளையும் போன்றவர் கள்.

7. *கீசுகீசென்கிற ஏழாம் பாட்டில் கீசுகீசென்றது க்ருஷ்ண க்ருஷ்ணவென்ற படி, ஸ்ரீநிவாஸன் என்பதைச் சீனன் என்றும் சீமு என்றும் கொச்சையாக வழங்கு வது போல, க்ருஷ்ணன் என்பதை கிட்டு என்றும் கிச்சு என்றும் வழங்குமாபோலே கீசு என்றும் வழங்குவது கொச்சை. பறவைகளும் க்ருஷ்ணநாமத்தையே கூறுகின் றன வென்றபடி. *அறுகால் வரிவண்டுகளாயிரநாமஞ் சொல்லிச் சிறுகாலைப்பாகு மென்றார் பெரியாழ்வார். *பொழில் வாயிருந்து வாழ்குயில்கள் அரியரியென்றவை யழைப்ப* என்றார் திருமங்கையாழ்வார்.

8. *கீழ்வானம் வெள்ளென் றென்கிற எட்டாம் பாட்டில் 'ஆராய்ந்தருள்' என் றது *யாம் வந்த காரியமாராய்ந்தருள்* என்ற விடத்திற் போல ஏவலொருமை வினைமுற்றன்று. அங்கு பூவைப் பூவண்ணவென்று எம்பெருமானை விளித்துச்சொல் லுவதாகையாலே அருள் என்று ஏவல் பொருந்தும்; இங்கு அங்ஙனமில்லாமையாலே 'அருளும்' என்றது அருள் என்று குறைந்துகிடக்கிறதென்று கொள்க. ஆவாவென்று ஆராய்ந்தருள்வன் என்றவாறு.

9. *தூமணி மாடத் தென்னு மொன்பதாம் பாட்டில் ஊமையோ செவிடோ வென்றது பிறர்பால் குற்றங்குறைகள் கூறும் விஷயத்தில் நாம் ஊமையாகவும், பிறர் நம்மீது குற்றங் குறைகள் கூறினால் அவற்றைச் செவியிற்கொள்ளாமைக் குச் செவிடாகவும் இருக்கவேணுமென்று சிக்ஷித்தவாறு.

10. *நோற்றுச் சுவர்க்க மென்கிற பத்தாம் பாட்டில் 'ஆற்றவனந்தலுடையாய்!' என்று அதிகமான நித்திரையுடைமையைச் சொல்லுகிறது. இது லௌகிகமான உறக்கத்தைச் சொன்னபடியன்று. *யாநிசா ஸர்வபூதாநாம் தஸ்யாம் ஜாகர்த்தி ஸம்யமீ, யஸ்யாம் ஜாக்ரதி பூதாநி ஸா நிசா பச்யதோ முநே:.* என்கிற பகவத் கீதா ச்லோகத்தைக் கொண்டு உண்மைப் பொருளுணர்க.

---



ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. திருக்குடந்தை நம் ஆண்டவன் ஸ்வாமியின் திருவுருவப்படத்தை ஸ்ரீரா மாநுஜனில் வெளியிட நமக்கு வெகுநாளாக ஆவலி ருந்தது. க்ருஹஸ்தாச்ரமத் திருவுருவப்படத்தையே வெளியிட ஆசைகொண்டிருந்தோம். பாக்கியம் வாய் க்கவில்லை. உத்தமாச்ரமத் திருவுருவப்படத்தை வெளியிடும் பாக்கியம் இன்றே வாய்த்தது, ஸ்ரீஸ்வாமி சென்னை ராயப்பேட்டை ஆச்ரமத்தில் எழுந்தருளியிருக்கிறபடி. லாயிட்ஸ் ரோட் கல்யாண மண்டபத்தில் தினப்படி மாலையில் திருப்பாவையு பந்யாஸம் ஸாதித்தருளுமழகு வாசாமகோசரம். அதிகமெழுதுவது ஸூர்யனுக்குக் விளக்கேற்றிக் காட்டுவ தொக்கும். (பூர்வாச்ரமத்தில் திருக்குட ந்தை கண்ணன் ஸ்வாமியே இப்போது ஆண்டவன்.)

*11.* *கற்றுக்கறவை யென்னும் பதினோராம்பாட்டிலே 'புற்றரவல்குல் புனமயிலே!' என்று ஒரு பெண்பிள்ளையினுடைய இடையழகும் கேசபாசத்தழகும் கூறப்படுகிறது. பெண்கள் பெண்களினுடைய வடிவழகிலேயீடுபட்டுப் பேசுவது தகுதியற்றது. ஆனாலும் *பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரியாயிருக்கை இராமபிரானுக்கு அமைந்தாப்போலே ஸ்த்ரீணாம் த்ருஷ்டிசித்தாபஹாரித்வம் ஸ்த்ரீகளுக்கு அமையும்.

*12.* *கனைத்திளங்கற் றெருமை யென்கிறபன்னிரண்டாம் பாட்டில் 'சினத்தினால்' என்றது அவசியமோ? என்று சங்கிக்கநேரும் சத்துருவை நிரஸிக்கும்போது சினமுண்டாவது ஸஹஜமாயிருக்க அதை யெடுத்துச் சொல்லவேணுமோ? என்று கேள்விவரும். வால்மீகிநாரதஸம்வாதத்தில் "கோ ஜிதக்ரோதஃ"?= சினத்தை வென்றவன் யாவன்? என்றொரு கேள்வியும், "கஸ்ய பிப்யதி தேவாச் ச ஜாதரோஷஸ்ய ஸம்யுகே?"= சினமுண்டானால் போர்க்களத்தில் தேவர்களும் அஞ்ச நிற்பவன் யாவன்? என்றொரு கேள்வியு முள்ளது. இராமன் தன்விஷயத்தில் தீங்கு செய்வார்திறத்தில் சினம்கொள்ளான்; தனக்கு உயிர்போல்வார்க்குத் தீங்கு செய்வார்மேல் சினமே வடிவெடுத்தவனாயிருப்பன்-என்னும் நுட்பமுணர்க.

---



23-12-67 முதல் நான்கு நாள் ஸ்ரீமான் மாஜி மந்திரி. K. வெங்கடஸாமி நாயுடு B. A. B L. அவர்கள், N. வேணுகோபாலநாய்க்கர் B. A. B. L. அவர்கள் முதலான ஆத்திகத் தலைவர்கள் சென்னை 48. கோவிந்தப்ப நாய்க்கன் வீதி, உப்பட்டூர் ஆழ்வார் செட்டி ராமாநுஜ கூடத்தில் நடத்திய 42 ஆம் ஆண்டு வைணவ மகாநாட்டின் ஆரம்ப விழாவின் காட்சி. எண்டோமெண்டு கமிஷனர் உயர் திரு ராதா கிருஷ்ணனவர்கள் மகாநாட்டைத் திறந்துவைக்க விஜயம் செய்திருக்கிறார். வி. பூதூர் வெங்கடசாமி ரெட்டியார் (தமிழ்வித்துவான்) அவைத்தலைமை தாங்கினர்.

13. *பொல்லாவரக்கனைக் கிள்ளிக் களைந்தானை* ராவணஸம்ஹாரத்திற்குப் பெருமாள் மிகவும் சிரமப் பட்டிருப்பதாக ஸ்ரீராமாயணத்தில் காணுநிற்க, அவனைக் கிள்ளிக் களைந்ததாகச் சொன்னது உண்மையுரை. *பிசாசாந் தாநவாந் யக்ஷாந் ப்ருதிவ்யாஞ்சைவ ராக்ஷஸாந், அங்குல்யக்ரேண தாந் ஹந்யாம் இச்சந் ஹரிகணேச்வர!* என்று விபீஷணபரிக்ரஹகாலத்தில் பெருமாள் அருளிச் செய்ததுதான் உண்மை. ராவணஸம்ஹாரத்தில் தாமதித்தது அவன் அநுகூலனாய்த் திருந்தி வருவனோ வென்கிற ப்ரதீக்ஷையினாலத்தனை. இவ்விடத்தில் *யதி வா ராவணஸ் ஸ்வயம்* என்ற பெருமாள் வசனத்தை நினைப்பது.

14. வெண்பல் தவத்தவர் = ஸ்ரீகுணரத்னகோசத்தில் *ஏகோ முக்தாதபத்ர* இத்யாதிச்லோகத்தில் *யத் தஸ்மை திஷ்டதேந்ய: க்ருபணம் அசரணோ தர்சயந் தந்தபங்க்தீ* என்றருளிச்செய்த கணக்கிலே அஹங்காரிகளான அல்பப்ரபுக்களிடத்திலே பல்லைக் காட்டாத பரமைகாந்திகள் வெண்பல்லினர்; மம மம என்னாதே தவ தவ என்பவர்கள் தவத்தவர். *உனக்கே நாமாட் செய்வோம்* என்றிருப்பவர்கள்.

15. இப்பாட்டு ஸம்பாஷணையாக அமைக்கப்பட்டது; எதற்காக? 'நானே தானாயிடுக' என்கிற உயர்ந்த தத்துவப் பொருளை வெளியிடுதற்காக. நம்மிடத்துக் குற்ற முள்ளதாகப் பெரியார்கூறினால் உண்மையில் நாம் குற்றவாளரல்லாவிடினும்



ஸ்ரீகாஞ்சீ நம்பிள்ளை ஸன்னிதியின் சாச்வத பரிபாலனத்திற்காக ஸ்தாபிதமாகியுள்ள சென்னைபுரி ஸ்ரீவைஷ்ணவ ஆஸ்திகஸமிதியின் நிர்வாஹகர்கள் 9-11-67 ல் காஞ்சீபுரம் விஜயம் செய்திருந்து நம்பிள்ளைஸன்னிதியில் மஹாஸபை நடத்திய காலத்தின் ஞாபகார்த்தமான உருவப்படம்.

'குற்றவாளனல்லேன்' என்று மறுக்காமல் இசைந்திடவேண்டுவது ஸ்ரீவைஷ்ணவ ஸ்வரூபம். *ருக்ஷாக்ஷராணி ச்ருண்வந் வை ததா பாகவதேரிதாந், ப்ரணம்யபூர்வகம் க்ஷாந்த்யா யோ வதேத் வைஷ்ணவோ ஹி ஸ:.* என்கிற வசனம் காண்க.

16. *நீ நேச நிலைக் கதவம் நீக்கு= ரஹஸ்யத்ரயத்தின் பொருளை வ்யக்தமாக உபதேசிக்கவேணு மென்பது உள்ளுறை பொருள். கதவுகள் இரட்டையாயிருக்கும். ரஹஸ்யங்கள் ஒவ்வொன்றும் இரட்டையாயிருப்பவை. திருமந்த்ரம்—ப்ரணவமும் மந்த்ரசேஷமுமாயிருக்கும். த்வயம், பூர்வகண்டமும் உத்தரகண்டமுமாயிருக்கும். சரமச்லோகம் பூர்வார்த்தமும் உத்தரார்த்தமுமாயிருக்கும். ஆக இங்ஙனே இரட்டைக்கதவுகள் போன்ற ரஹஸ்யங்கள் மூன்றையும் விவரித்தருளவேணு மென்று ஆசாரியனை வேண்டுகிறபடி.

17. அம்பரம் தண்ணீர் சோறு இவற்றை அறம் செய்பவர் ஆசாரியர். (எங்ஙனேயென்னில்;) அம்பரமாவது ஆகாசம்; பரமாகாசமான பரமபதம். தண்ணீரென்பது விரஜாதீர்த்தம் சோறு என்பது, ஸாமகானத்தில் அஹமந்நாத:! அஹமந்நாத:! அஹமந்நாத:!!! என்பதில் அன்ன சப்தார்த்தமான பரப்ரஹ்மாநுபவம். இவைமூன்றையும் அளிப்பவர் ஆசாரியர்.

18. பந்தார்விரலி= பந்தைத் தம் கையில் அடக்கிவைத்துக்கொண்டிருப்பவர் ஆசாரியர். பந்து என்பதற்கு ஸ்வாபதேசம், ஆசார்யஹ்ருதயம்-இரண்டாம் ப்ரகரணம் முடிவு சூர்ணையில் காண்க. "பொங்கைம்புலனில் போக்யாதிஸமூஹம்" எனப்பட்டது. போக்ய போகோபகரண போகஸ்தானங்களையெல்லாம் கையடைப்பாக வைத்துக்கொண்டிருப்பவரென்றது உபயவிபூதிநிர்வாஹகரென்றபடி.

---



—இதுவும் நம்பிள்ளை ஸமிதி கோஷ்டி 9-11-67—

19. மலர்மார்பா வாய்திறவாய் = விசாலமான ஹ்ருதயத்தையுடைய ஆசாரியரே [எம்பெருமானாரே!] வாய்திறந்து எங்களை உய்வித்தருளவேணுமென்று ப்ரார்த்திக்கிறபடி. எம்பெருமானார்க்கு முற்பட்ட ஆசாரியர்கள் ஸங்குசிதஹ்ருதயர்களாக இருந்தபடியாலே "ஓராண்வழியாயுபதேசித்தார்முன்னோர்" என்று மணவாளமாமுனிகள் அருளிச்செய்தபடி ஸங்குசிதமாகவே உபதேசித்துப் போந்தார்கள். எம்பெருமானார் மலர்மார்பா! என்னும்படி விகஸித ஹ்ருதயராயிருந்தபடியாலே *பாருலகிலாசையுடையோர்க்கெல்லாமாரியர்காள் கூறுமென்றுபேசி ஸம்ப்ரதாயஸரணியை மிக விகஸிதமாக்கியருளினார்.

20. முப்பத்து மூவரில் *நப்பின்னை நங்காய் திருவே* என்று விளித்திருக்கையாலே ஸ்ரீதேவி பூதேவிகளோ டொக்கப் பரிகணிதை என்பது விளங்கா நின்றது. நம்மாழ்வார் நீளாதேவியைச் சொல்லவிரும்பு மிடங்களில் நப்பின்னையையே சொல்லிவருவது காண்க. திருவிருத்தத்தில் *குழற்கோவலர் மடப்பாவையும் மண்மகளும் திருவும்* என்றும், திருவாய் மொழியில் *உடனமர் காதல் மகளிர் திருமகள் மண்மகளாயர் மட மகளென்றிவர் மூவர்* என்றும், *கூந்தல் மலர் மங்கைக்கும் மண்மடந்தைக்கும் குலவாயர் கொழுந்துக்கும் கேள்வன் தன்னை* என்றும் *பின்னைகொல் நிலமாமகள் கொல் திருமகள்கொல்* என்றுமருளிச்செய்தவை காண்க. இதுகொண்டே கூரத்தாழ்வான் *நீலா குலேந ஸத்ருசீ கில ருக்மிணீச* என்றும், பட்டர் *நீளாதுங்க ஸ்தநகிரிதடீஸுப்தம்* என்று மருளிச் செய்யலாயிற்று.

21. *ஏற்றகலப்பாசுரத்திலுள்ள ஸம்போதனங்களினால் எம்பெருமானுடைய பரவ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சைகளாகிற பஞ்சப்ரகாரங்களும் அநுபவிக்கப்பட்டுள்ளன. பெரியாய்! என்று பரத்வம். ஊற்ற முடையாய்! என்று வியூஹம்; ஆச்ரித ரக்ஷணார்த்தமாகக் கிடக்குமிடம் திருப்பாற் கடலாகையாலே ரக்ஷணத்தில் ஊற்ற முடைமையுணர்க. பெரும் பசுக்களாற்றப் படைத்தான் மகனே! என்று விபவம். உலகினில் தோற்றமா யென்று அந்தர்யாமித்வம். வேண்டும்போது தோற்றுவதற்காக உள்ளே பதிகிடக்கிறபடி. நின்ற சுடரே! என்று அர்ச்சாவதாரம். விபவங்கள் போலே தீர்த்தம் ப்ரஸாதியாதே ஸம்ஸாரம் கிழங்கெடுத்தாலல்லது பேரேன் என்றிருக்குமிடமிறே அர்ச்சை.

22.*அங்கண்மாஞாலத்தில் *அங்கணிரண்டுங்கொண்டு* என்றது உட்கண்ணும் கட்கண்ணுமாகிற இரண்டு கண்களாலுமென்றபடி. *ஆமுதல்வனிவன்* என்று குளிரக் கடாக்ஷிக்குங் கண் உட்கண். *சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி* என்னும்படியானது கட்கண். *ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேந் மதுஸூதநः* என்றதும் கொள்ளத்தக்கது.

23. *மாரிமலைமுழஞ்சிற்பாசுரத்தில் *வேதோத்தம்ஸ குஹாவிஹாரபடுவாய் *வலிமிக்கசீயமிராமானுசன்* என்று நூற்றந்தாதியில் சீரிய சிங்கமாகக் கூறப்பட்ட இராமானுசனுக்கு - சிங்காசனமும் சீரியசிங்காசனமும் கோப்புடைய சீரியசிங்காசனமுமாக மூன்று ஆஸனங்களுண்டு. யதிராஜ ஸப்ததியில்*பஜதி யதிபதௌ பத்ரவேதீம் த்ரிவேதீம்* என்னப்பட்ட த்ரிவேதியே கோப்புடைய சீரிய சிங்காசனமாகும். ரிக்வேத யஜுர்வேத ஸாமவேதங்களாகிற மூன்று வேதங்களன்று இங்கு த்ரிவேதியாக விவக்ஷிதம். பேதச்ருதி அபேதச்ருதி கடகச்ருதியாகிற மூன்றேயெனக் கொள்க. அத்வைதிகள் அபேதச்ருதியை மட்டும் ஆதரித்தனர். த்வைதிகள் பேதச்ருதியை மட்டும் ஆதரித்தனர், அந்தர்யாமிப்ராஹ்மணமாகிற கடகச்ருதியை மேற்சொன்ன இருவகுப்பினரும் உபேக்ஷித்தனர். மூன்றுவகைப்பட்டச்ருதிகளையும் ஸமரூபமாக ஆதரித்தவர் நம்ஸ்வாமி யெம்பெருமானாரே.

24. *அன்றிவ்வுலகத்தில் *நின்கையில்வேல்போற்றி* என்னும்படி கண்ணபிரான் திருக்கையில் வேலுண்டோவென்று சங்கிக்கவேண்டா.கீழே முதற்பாட்டில் *கூர்வேல்

கொடுந்தொழிலன் நந்தகோபன்* என்று நந்தகோபனுக்கு வேலுள்ளதாகச் சொல்லிற்று. மேல் நாச்சியார் திருமொழியில் இடைச்சிகள் பேச்சால்*வேலைப்பிடித்தென்னைமார்கள் ஓட்டிலென்ன விளையாட்டோ? *என்று இடையர்கட்கெல்லாம் வேலுள்ளதாகச் சொல்லிற்று. ஆகவே இடைச்சாதிக்குரிய ஒரு கோலே வேலாகச்சொல்லப்பட்டதென்று கொள்க. இங்கு திருவாழியாழ்வான் அந்தரங்க விவக்ஷிதர். திருச்சங்குக்கும் உபலக்ஷணம். ஆக திவ்யாயுதங்களுக்குப் பல்லாண்டு பாடினபடி.

25. *ஒருத்திமகனாயில் *தரிக்கிலானாகித்தீங்கு நினைந்த கஞ்சன்கருத்தைப் பிழைப்பித்து- ஓரிரவில் ஒளித்து வளர* என்றதில் யாதவப்ரகாசர் ஸ்ரீராமாநுஜரை மாய்க்க வெண்ணின வரலாறும், ராமாநுஜர் விந்தியாடவியில் ஒளித்து ஓரிரவில் கச்சிப்பதி சேர்ந்து வளர்ந்த வரலாறும் முத்ராலங்கார வகையில் ஸூசிதமாகிறபடி காண்க.

26. *மாலே மணிவண்ணாவில் *மேலையார் செய்வனகள் வேண்டுவன* என்றதைத் திருவுள்ளம் பற்றியே நம் ஸ்வாமி கீதாபாஷ்யத்தில் *யத்யதாசரதி ச்லோகத்தில் *ஸ யத்ப்ரமாணம் குருதே* என்றவிடத்திற்கு சங்கராசாரியர் யத்- ப்ரமாணம் என்று பதச்சேதம் பண்ணி யெழுதிவைத்த பொருளைத்தள்ளி (யத்ப்ரமாணம்) என்று பஹுவ்ரீஹிகர்ப்ப ஸமஸ்தபதமாக வைத்து வியாக்கியானித்தருளின விசேஷங்களை அடியேனது திருப்பாவையாழ்பொருள் விளக்கில் விரிவாகக் கண்டு களிக்கவேணும் ரஸிகவித்வான்கள்.

27. *கூடாரை வெல்லுஞ்சீரில் *சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே பாடகமே* என்று ஐந்து ஆபரணங்களைச் சொன்னது *தாபஃ புண்ட்ரஸ் ததா நாம மந்த்ரோ யாகச் ச பஞ்சமஃ, அமீ பரமஸம்ஸ்காராஃ பாரமைகாந்த்ய ஹேதவஃ* என்னப்பட்ட பஞ்ச ஸம்ஸ்காரமாகிற ஆத்மாலங்காரங்கள் ஐந்தையுஞ் சொன்னபடி யென்று நுட்பமாகவுணர்க.

28. *கறவைகள் பின் சென்றில் *உன்றன்னைச் சிறுபேரழைத்தனவும் சீறியருளாதே* என்றதற்கு—நாராயணனைப் பராத்பரனைவுன்னை கோபாலா! கோவிந்தா! என்று சிறுமையாக அழைத்துவிட்டோம், க்ஷமிக்கவேணும்- என்றதாகப் பொருள் கூறுவர் அரஸிகர்கள். இதுவன்று பொருள். கோபிகள் கண்ணனுடைய ஸௌலப்ய ஸௌசீல்யப் பெருமைகளிலே மிகமிக ஈடுபட்டுவிட்டதனால் இவர்களது கொள்கைப்படி அவனது பரத்துவம் பயனற்றதாயிற்று. ஆகவே பரத்வத்திற்கு ஏகாந்தமான நாராயண நாமத்தைச் சொன்னது அபசாரமாய்த் தோற்றி அதற்கு க்ஷமைவேண்டுகிறார்கள் என்பதே பரமார்த்தம்.

29. *சிற்றஞ்சிறுகாலையில் *எற்றைக்குமேழேழ்பிறவிக்கும்* என்றது இன்சுவை மிக்க வார்த்தை. ஆழ்வார்கள் *இருள்தருமா ஞாலத்துளினிப்பிறவியான் வேண்டேன்*என்றும் *ஆதலால் பிறவி வேண்டேன்* என்றும் பிறவியை வெறுத்தார்கள். ஆண்டாள் *அநுஜநுரநுரூப ரூப சேஷ்டா*என்ற பட்டர்ஸ்ரீஸூக்திப்படியும் *விஷ்ணோர் தேஹாநுரூபாம் வை கரோத்யேஷா ஆத்மநஸ் தநூம்* என்ற பராசரமஹர்ஷி வசனத்தின் படியும் எம்பெருமான் பிறக்கும் போதெல்லாம் தானும் ஒக்கப்பிறப்பவளாகையாலே பல பிறவிகளையும் விரும்பிப் பேசினபடி.

30. *வங்கக்கடல் பாசுரத்தின்வியாக்கியான ஸ்ரீஸூக்தி—"விடிவோறேயெழுந்திருந்து முப்பது பாட்டையும் அநுஸந்தித்தல் ,மாட்டிற்றிலனாகில் *சிற்றஞ்சிறு காலையென்கிறபாட்டை யநுஸந்தித்தல்,அதுவும் மாட்டிற்றிலனாகில் நாமிருந்த விருப்பை நினைப்பது என்று பட்டர் அருளிச்செய்வர்" என்பதாம்.

கோதைதமிழ் மாலை நறுமணம் முற்றிற்று.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

# சென்னையில் திருப்பாவை வித்வத்ஸதஸ்ஸுகள்

மார்கழி மாதத்தில் சென்னையில் ஐம்பது பேட்டைகளில் ஏறக்குறைய நூறு இடங்களில் திருப்பாவை ப்ரவசனங்கள் ஆண்களாலும் பெண்களாலும் நடைபெற்று வருவதாக ஒரு பக்தர் கணக்கெடுத்துத் தெரிவித்தார். ஸங்கியை இன்னமும் அதிகமாக இருக்குமேயொழியக் குறைவாக இராதென்று நாம் நினைக்கிறோம். *எங்கும் திருவருள் பெற்றின்புறுவர்* என்று ஆண்டாள் செய்தருளின மங்களாசாஸனம் மற்றையிடங்களிற் காட்டிலும் சென்னைமாநகரில் வீறுபெற்று வருவதுபற்றிப் பரமஸந்தோஷமடைகிறோம். இந்த ப்ரவசனம் எத்தனையிடங்களில் நடந்தாலும் ச்ரோதாக்களுக்குக் குறையில்லாமலிருப்பது சென்னைமாநகர்க்கு அஸாதாரணமான பெருமை. இதுமட்டுமன்று; எந்த



ப்ரவசனமும் ச்ரோதாக்களால் மிகமிகக் கொண்டாடப்பட்டே வருகின்றதென்பது தனிப்பட்ட விசேஷம். *அவரவர் தாந்தாமறிந்த வாறேத்தி* என்று பொய்கையாழ்வாரும், *தங்களன்பாரத் தமது சொல்வலத்தால் தலைத்தலைச் சிறந்து பூசிப்ப* என்று நம்மாழ்வாரும் அருளிச் செய்தபடி அவரவர்கள் தம்தம் அறிவுக்கும் ஆற்றலுக்கும் எட்டியவளவு பேசினாலும், பேயாழ்வார் பாசுரமொன்றுண்டே (அதாவது) *பேசுவார் எவ்வளவு பேசுவர் அவ்வளவே வாசமலர்த் துழாய் மாலையான்... ..வடிவு* என்பது, அந்தப் பாசுரமே எங்கும் வெற்றி பெற்று நிற்கும். அமுதனாரும் நூற்றந்தாதியில் *பெரியவர் பேசிலும் பேதையர் பேசிலும் தங்குணங்கட்குரிய சொல் என்றுமுடையவன்* என்று ஸ்ரீராமாநுஜர் விஷயத்தில் பணித்ததும் இங்கே நினைக்கத்தகும்.

இதுவன்றியும், **திருப்பாவை வித்வத்ஸதஸ்**ஸென்று (சென்னையில்) சிலவிடங்களில் சிலவாண்டுகளாக நடத்தப்பட்டுவருகிறது. திருப்பாவைப் பாசுரங்கள் முப்பதாகையால் முப்பது வித்வான்களைக் கூட்டியும் பத்தெட்டு வித்வான்களைக் கூட்டியும் இந்த ஸதஸ்ஸுகள் சில பேட்டைகளில் நடத்தப்பட்டுவருகின்றன. இத்தகைய ஸதஸ்ஸுகளின் நிபந்தனை மாற்றப்படவேண்டியது மிக அவசியம். ஒரு மாமி சொல்லுவளாம்— "என் மாப்பிள்ளைக்கு முப்பத்திரண்டு குணங்களில் முப்பது குணங்கள் குறையற்றிருப்பவை; இரண்டு குணங்கள் மட்டுமே குறைவு; அதாவது, தனக்கும் தெரியாது, பிறர் சொன்னாலும் கேளார்" என்று. இங்ஙனேயுள்ள சில ப்ரவர்த்தகர்களுக்கு நாம் தெரிவிப்பது பயனற்றதேயாயினும் என்றேனும் பயன்படுமென்று தெரிவித்துவைக்கிறோம்.

திருப்பாவை மூலமே தெரியாதவர்களுங்கூட ப்ரவசனம் செய்து வருகிறார்கள்; ஒருநாள் ஓரிடத்தில் காதுகொடுக்க நேர்ந்தது; அவ்விடத்து ப்ரவக்தா [ஏற்றக்கலங்கள் அதர்பொங்கி மீதுளிப்ப] என்றாரம்பித்தார்; அதிர்வேட்டு போடுமாபோலேயிருந்தது. ஏற்றக்கலங்கள் என்று திருப்பித் திருப்பிப் பன்முறையும் கோஷிக்கிறார். ஒரு ப்ரவசன கர்த்தாவை *நீளாதுங்கஸ்தநகிரிதடீ*ச்லோகத்தில் (பாரார்த்த்யம்) என்கிற பதத்திற்கு எப்படி விக்ரஹமென்று கேட்டேன். 'திருமாளிகையில் அப்பாகாலம் முதலாகவே ஸாளக்ராமாராதனமேயொழிய விக்ரஹாராதனம் கிடையாது' என்றார். முப்பதில் இருபது பண்டிதர்கள் இத்தகைய ஸமாதான வக்தாக்களே. ப்ரௌட வித்வான்களோடு இவர்களைக் கூட்டுவதும், 'மார்கழியில் மாசியைச் சொல்லவேண்டியது, *அம்பரமே தண்ணீரில்

*அம்பரமனல்கால்நிலம்பாட்டைச் சேர்த்துச் சொல்லவேண்டியது' என்றிப்படி கட்டளையிடுவதும், இதற்கும் சில வித்வான்கள் இசைந்துவருவதும் ஜனவரி வேடிக்கைகளில் இதுவுமொரு வேடிக்கையென்றெண்ணத் தகுமத்தனே. ப்ரவர்த்தகர்கள் உசிதவேதிகளாயிருந்தால், மார்கழியில் மட்டுமன்றிக்கே நியதமாக ப்ரவசனம் செய்து போருகிற வித்வான்களை யெழுந்தருளப் பண்ணி "திருப்பாவையில் தேவரீர்க்கு அபூர்வமாகத் தோன்றுகிற அர்த்தவிசேஷங்களை உபந்யஸித்தருளவேணும்; கால்மணியவகாசத்தில் அல்லது அரைமணிக்கு மேற்படாமல் ஸாதித்தருளவேணும்" என்று ப்ரார்த்திப்பது பாங்கு.

மேலமாம்பலம் ஸ்ரீ சாரதா உயர்தர ஆரம்பப்பள்ளியில் 31—12—67 தேதியில் நடைபெற்ற திருப்பாவை வித்வத்ஸதஸ்ஸு ஸ்ரீமான் உவே. கபிஸ்தலம். A. ஸ்ரீநிவாஸாசாரியருடைய முயற்சியால் நடைபெற்றது மிகமிகப் பாராட்டத்தக்கதாயிருந்தது. எழுந்தருளியிருந்த ப்ரவக்தாக்கள் ஸங்க்யையில் குறைந்திருந்தாலும் பரிகணிதர்களும் ப்ராமாணிகர்களுமான வித்வான்கள். அகடிதகடநாசக்தி பரீக்ஷையில்லாமலும் அவகாச நிர்ப்பந்தமில்லாமலும் திருப்பாவையின் அரும்பெரும் பொருள்களை அமைதியுடன் ஸாதித்தார்கள் ச்ரோதாக்களும் பரமானந்த பரவசராயினர். இந்த ஸதஸ்ஸு நாளடைவில் மேன்மை பெற்று மேலோங்கி வளருமென்று தோன்றிற்றெமக்கு.



இந்தப் பள்ளியில் மானேஜர் பதவியை வஹிக்கும் ப்ரஹ்மஸ்ரீ. N வேங்கடராமய்யரவர்களைப் பற்றி இதுகாறும் நாம் கேள்விப்பட்டிருந்ததேயொழியக் காணப்பெற்றதில்லை. அன்று யாத்ருச்சிகமாய்க் காண நேர்ந்தது. நமக்குச் சென்னையின் பழக்கம் பலகாலமாகவேயிருந்தும் இப்பெரியாருடைய பரிசயம்பெற ப்ரஸக்தி இதுகாறும் நேராமற்போயிற்றே யென்கிற நிர்வேதம் அன்று மிகவுமுண்டாயிற்று. அவர்கள் சேர்ந்து விளங்கும் பலபல அரியபெரிய உருவப்படங்களை அன்று அப்பள்ளியின் பல பாகங்களில் காண நேர்ந்து உள்ளமுமுடலும் பூரித்தோம். ஐயரவர்கள் டம்பலேசமுமற்ற ஏகாந்த

சிலரென்று உவந்தோம். பிறகு பல மஹான்கள் மூலமாக ஐயரவர்களுடைய பல்வேறு



வழிகளில் பெருகிய தருமசிந்தனைகளைப் பற்றி மிகமிகக் கேள்விப்படவும் ப்ராப்தமாயிற்று. உயர்ந்த பணிகளில் ச்ரத்தாளுவென்றும், மாசும் மறுவுமற்ற ஆசயமுள்ளவரென்றும் நன்கு தெரிந்துகொண்டு இவர்களுக்கு ஒரு விருது அளிக்கவேணுமென்று நமது உள்ளத்தில் ஆவலெழுந்தது. அவர்களுக்கு விருதளிக்கும் யோக்யதை நமக்கு என்னவுள்ளது? இல்லையெனினும் நமக்குத் தோன்றிய ஆவலை அங்குக் கூடிய சில மஹநீயர்களிடம் தெரிவித்துக் கொள்ளுகையில் இந்த மனோரதத்தைப் பலரும் ஆமோதித்ததனால் துணிந்தும் உவந்தும் ஒரு விருதளித்தோம்.

## "ச்ரத்தா சுத்தாசய"

என்பதே அந்த விருது. அப்போது அவர்களது பெருமைகளைச் சில வார்த்தைகளினால் வெளியிட்டு அனைவரும் கரகோஷம் செய்து ஆனந்திக்க இந்த விருதை உவந்தளித்தோம். பிறகு பரிகணிதர்களான வித்வான்களின் திருப்பாவையரும்பெரும்பொருட் பொழிவுகள் நடைபெற்று ஸதஸ்ஸு இனிது முடிவுபெற்றது. ... ... ✽

## கடிதங்கள்

**(ஸ்ரீ உவே. A. ஸ்ரீநிவாஸாசாரியர் மேலமாம்பலம்)**

31—12—67 ஞாயிறு காலை 11-00 மணி முதல் மாலை 4-00 மணி முடிய மேற்கு மாம்பலம், ஸ்ரீ சாரதா உயர்தர ஆரம்பப்பள்ளியில் திருப்பாவை ஸதஸ் நடைபெற்றது.

அன்று காஞ்சீபுரம் ஜகதாசார்ய சிம்மாஸநாதிபதி. மஹாவித்வான் ஸ்ரீ உவே. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யஸ்வாமி ராஷ்ட்ர விருது பெற்றதைப் பாராட்டும் வகையில் ஒரு விழாவும் நடைபெற்றது வித்வான்கள் அனைவரும் பூர்ணகும்பத்துடனும், மேள வாத்தியங்களுடனும் வரவேற்கப்பட்டனர். பள்ளி ஹாலில் பதினொரு வித்வான்கள் மேடையை அலங்கரித்தனர். ஸ்ரீஉவே. திருவேங்கடாசாரியார் புல்லாங்குழல் இசையுடன் ஆரம்பித்தது. ஸ்ரீ உவே. கோயில் தி. அ. சதாபிஷேகம்ஸ்வாமி, ஸ்ரீ சாண்டில்யன், ஸ்ரீ N. ஸ்ரீனிவாஸாசாரியார், பிரம்மஸ்ரீ உடையாளூர் ராமமூர்த்தி சர்மா ஆகியோர் ஸ்ரீ P. B. A. ஸ்வாமியைப் பற்றிப் புகழ்ந்து பாராட்டினார்கள். Vani Pharmacy உரிமையாளர் ஸ்ரீ S. பார்த்தசாரதி அய்யங்கார் சார்பில் பள்ளி நிர்வாகி ஸ்ரீ N. வெங்கடராமன் ஸ்ரீ ஸ்வாமிக்குப் பொன்னாடையைப் போர்த்தி கௌரவித்தார். பின்பு ஸ்ரீஸ்வாமி திருப்பாவையின் ஸாரார்த்தங்களை அற்புதமாக அனுக்கிரஹித்து, முடிவில் பள்ளி நிர்வாகிக்கு **ச்ரத்தா சுத்தாசய:** என்ற பட்டமளித்தும் கௌரவித்தார்கள். பள்ளி நிர்வாகியும் ஸ்ரீ ஸ்வாமிக்கு சால்வையைப் போர்த்தி மாலையணிவித்தார்கள். பின்பு பக்தர்கள் சார்பில் ஸம்பாவனை செய்யப்பட்டது. எம்பார் உவே. விஜயராகவாசார்ய ஸ்வாமி அக்ராஸனம் வகித்து திருப்பாவை ஸதஸ்ஸைத் துவக்கிவைத்தார்கள். அவரைப் பின்பற்றிப் பேசிய வித்வந்மணிகள்: ஸ்ரீ உவே. சதாபிஷேகம் கோவிந்த நரஸிம்மாசார்ய ஸ்வாமி, ஸ்ரீ உவே. பிள்ளைலோகம் பாஷ்யகாரர் ஸ்வாமி, ஸ்ரீஉவே. K. வரதாசார் ஸ்வாமி, ஸ்ரீஉவே. P. B. S. ராமானுஜாசார் ஸ்வாமி, ஸ்ரீ உவே. கார்ப்பங்காடு. ரங்கராமானுஜய்யங்கார் ஸ்வாமி, ஸ்ரீ உவே. நாகை. ராகவாசார் ஸ்வாமி, ஸ்ரீஉவே. குண்டலம். திருமலாசார் ஸ்வாமி, ஸ்ரீஉவே. கார்ப்பங்காடு. வேங்கடாசார் ஸ்வாமி. எல்லா வித்வான்களையும் அட்வகேட் ஸ்ரீ T. V. ஸ்ரீனிவாஸாசாரியார் வரவேற்றார். திருப்பாவை உபன்யாசங்களின் இடையில் ஸ்ரீ மதுரை வேங்கடேசனின் இன்னிசை நடந்தது. முடிவிலும் ஸ்ரீ வேங்கடவரதன் பார்ட்டியாரால் திருப்பாவை கச்சேரி நடைபெற்றது. அடியேனால் (A. ஸ்ரீனிவாஸ அய்யங்காரால்) நன்றி தெரிவிக்கப்பட்டு ஸதஸ் முடிவு பெற்றது. ... ...





# எழுபத்தேழு பெரியார்களின் பெருமை.

(முன்தொடர்ச்சி—5)

## 28. ஸ்ரீமதுபயவே. மஹர்ஷி. வாஸுதேவாசார்யஸ்வாமி

சென்னை மாம்பலத்தில் இருபது ஸம்வத்ஸரங்களுக்குமுன் ஜ்ஞாநாநுஷ்டான நிதியாக வாழ்ந்த ஸ்ரீஉவே. S. வாஸுதேவாசார்யஸ்வாமியை இற்றைக்கும் நினையாதாரில்லை. இவர் மஹர்ஷி யென்று வழங்கப்பட்டுவந்தார். லௌகிகவ்ருத்தியிலிருந்து கொண்டு வைதிக மார்க்கத்தில் ச்ரத்தை கொண்டவர்களில் இந்த ஸ்வாமி அக்ரகண்யராக விளங்கினவர். ஆங்கிலத்தில் M. A. L. T. முதலான பட்டங்களைப் பெற்றிருந்த இந்தஸ்வாமியை லௌகிகரென்றே பலர்நினைத்திருக்கக்கூடும். இவருடைய திருமேனியை ஸேவிக்குமவர்களனைவரும் இவரைப் பரமவைதிகஸார்வபௌமரென்றே கூறுவர். இவரிடத்தில் லௌகிகக் கல்விகளைப் போலவே வைதிகக்கல்விகளைப்பயின்றவர்களும் பலபலர். ஸ்ரீபாஷ்யபகவத்விஷய ரஹஸ்யக்ரந்த கால க்ஷேபங்களை நாள் தவறாமல் ஸாதித்துக் கொண்டிருந்தவர். “நாட்காலே நீராடி” என்று ஆண்டாள் ஸாதித்தது மார்கழி முப்பது நாளைக்கு. இந்தஸ்வாமியின் அனுஷ்டானம் யாவதாயுஷம். வேதாந்ததீபிகை யென்னும் பெயரால்நடந்து கொண்டிருந்த அஹோபிலமடத்துப் பத்திரிகைக்கு இவர் பலவாண்டுகள் ஸம்பாதகராகவிருந்து அரிய பெரிய விஷயங்களை யுதவியுள்ளார். இவருடைய ஸர்வபூத ஸௌஹார்த்த ஸௌஜந்யங்களைப்பற்றி எத்தனைபக்கமெழுதினாலும் மிகையாகாது. ஸகல பூர்வாசாரியர்களிடத்தும் ஸமமானப்ரதிபத்தி கொண்டிருந்தவர் இந்த ஸ்வாமி. தம்முடைய திருவுள்ளத்திற்கு ஏலாத அர்த்தம் எந்த மஹான் ஸாதித்ததாயிருந்தாலும் அதை ஆதரிக்கமாட்டார். இவர் மடத்து ஸம்பிரதாயத்தைச் சேர்ந்தவராதலால் நம்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளை வேதத்தினும் மேம்பட்டதாகக் கொண்டிருந்தார். சென்னையில் நடை பெறும் அடியேனுடைய உபந்யாஸங்களுக்குப் பெரும்பாலும் ஸேவைஸாதித்துக் கொண்டிருந்ததனால் இவருடைய பரிசயம் அடியேனுக்கு அபரிமிதமாக வாய்த்தது. மனோவாக்காயங்களில் ஐகரூப்யம் என்கிற ஆர்ஜவகுணத்தை இந்தஸ்வாமி யிடத்தில்தான் அடியேன் அதிகமாக அனுபவித்தவன். .... .... .... .... *

## 29. ஸ்ரீமதுபயவே. வை. மு. சடகோபராமாநுஜாசாரியஸ்வாமி.

திருவல்லிக்கேணியில் ஸ்ரீமதுபயவே. வைத்தமாநிதி. முடும்பை அப்பங்கார் ஸ்வாமியென்று ஸுப்ரஸித்தரான ஸம்ப்ரதாயப்ரவசன நிரதர் அறுபது வருஷங்களுக்கு முன்பு எழுந்தருளியிருந்தார். அவருடைய மூத்ததிருக்குமாரர் சடகோப ராமாநுஜாசார்யஸ்வாமி. இளைய திருக்குமாரர் வை.மு.பார்த்தஸாரதி ஐயங்காரென்பவர் இற்றைக்கும் திருவல்லிக்கேணியில் வாழ்ந்து வருகிறார். இவருடைய திருத்தமையனாரான சடகோபராமாநுஜாசாரியர்ஸ்வாமி பரமபதித்து இற்றைக்கு ஐம்பத்தைந்து வருடங்களுக்கு மேலாகிறது. இவர் தமிழ்க்கடலில் பாரங்கதராயிருந்ததோடு வடமொழியிலும் ஆழ்ந்த ஞானம்பெற்றிருந்தார். கும்பகோணம் காலேஜில் பல வாண்டுகள் தமிழ்த்தலைமை யாசிரியர் பதவியை யலங்கரித்திருந்தார். ஜகத்ப்ரஸித்த காலக்ஷேபபரரான திருத்தகப்பனாரிடத்தில் ஸம்பிரதாயக்ரந்த்ங்களை வரியடைவே கற்றவராதலால் பூர்வாசார்ய திவ்யஸூக்திகளில் ஒப்புயர்வற்ற ப்ரதிபத்தி கொண்டவர் என்பது இவர்க்குத் தனிச் சிறப்பு. கம்பராமாயணம், பிள்ளைப் பெருமாளையங்கார் அஷ்டப் பிரபந்தம் முதலிய பல தமிழ் நூல்களுக்கு இந்த

ஸ்வாமி யெழுதிவெளியிட்டிருக்கும் உரைகள் உலகம் போற்ற விளங்குகின்றன. அக்காலத்தில் பள்ளிக்கூட மாணுக்கர்களுக்குப் பேருதவியாக இவர் எழுதிவெளியிட்ட உரைகள் (**Text Notes**) அபரிமிதம். மஹாமஹோபாத்யாய. சாமிநாதையரவர்களுக்கு இவரிடத்தில் மஹத்தான ப்ரதிபத்தி.

இந்தஸ்வாமிக்குக் காஞ்சீபுரத்தில் நெருங்கினதேஹஸம்பந்திகள் இருந்தபடியால் இவர் அடிக்கடி காஞ்சீபுரிக்கு எழுந்தருள்வர். ஒருஸமயம் எழுந்தருளின போது இரண்டுமாதங்கள் தங்கியிருந்தார். அப்போது இவரிடத்தில் அடியேன் யாப்பிலக்கணநூல்கள் சில வாசிக்க ப்ராப்தமாயிற்று. இரண்டு வருடங்கள் வாசித்துணரவேண்டிய விஷயங்களை இரண்டு மாதங்களில் கற்பித்தார். அப்போது இவருடைய போதனுசக்தியை அற்புதமாகக் கண்டுவியந்தேன். அடியேனுடைய மாதாமஹரான ஸ்ரீமத். பரமஹம்ஸ. அழகியமணவாளராமாநுஜ(ஷஷ்டி)ஜீயர்ஸ்வாமியிடம் [தேவப்பெருமாள் ஸன்னிதிக்குள்ளிருந்த]சடகோபநிலையபாடசாலையில் தமிழ்வாசித்தவர்கள் பலர். அவர்களில் ஒருவரான புன்னைசீமாச்சார் என்பவரிடத்தில் தமிழ்க்கலைகள் பயின்றவர் இந்த வைத்தமாநிதிஸ்வாமி. இவர் மிக்க இளமையிலேயே பரமபதித்தனர்.

## 30. ஸ்ரீமதுபயவே, வை. மு. கோபாலக்ருஷ்ணமாசார்யஸ்வாமி.

மேலே ப்ரஸ்தாவித்த சடகோபராமாநுஜாசாரியர் ஸ்வாமிக்குத் தம்பிமுறையில் சேர்ந்த இவரும் சிறந்த தமிழ் வித்வானுக விளங்கினவர். தமிழுலகுக்குப் பேருதவிகள் புரிந்தவர். ஸம்ஸ்க்ருதஜ்ஞானமும் நன்கு உடையவர். திருவல்லிக்கேணியிலேயே வாழ்ந்தவர். இவர் பரமபதித்த காலம் இருபது ஸம்வத்ஸரங்களுக்குட்பட்டது. சடகோபராமாநுஜாசாரியர்ஸ்வாமி உரைநூல்களெழுதிய போது இந்த கோபாலக்ருஷ்ணமாசாரியரும், சே. கிருஷ்ணமாசாரியர் என்று ப்ரஸித்தரான தமிழ்ப்பண்டிதரும் உடனிருந்து துணைபுரிந்தவர்கள். இவ்விருவரும் சடகோபராமாநுஜாசார்யஸ்வாமியினுல் முன்னேற்றமடைந்து சிலபல தமிழ்நூல்களை வெளியிட்டு ப்ரஸித்திபெற்றவர்கள். சே. கிருஷ்ணமாசாரியர் பதிப்பு நூல்களில் பகவத்விஷயப்பதிப்பு மஹோபகாரகமாய் விளங்குகின்றது. .... *

## 31. ஸ்ரீமதுபயவே. கோயில் பத்தராவிஸ்வாமி.

திருவரங்கம் பெரிய கோயிலில் ஐம்பத்தைந்து ஆண்டுகட்குமுன்பு எழுந்தருளியிருந்த மஹாஸ்வாமி. 'நெருப்பையலம்புகிறவர்' என்னும் படியான சிஷ்டாக்ரேஸரர். உபயவேதங்களையும் அதிகரித்து நம்பெருமாள் ஸன்னிதியில் வேதபாராயணகைங்கரியத்தில் அக்ரேஸரராயிருந்து அசீதி ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருந்தவர். நம்முடைய ஸம்ப்ரதாயக்ரந்தங்களில் பரிநிஷ்பந்நமான ஞானமுடையவர். அடியேனுடைய வியாக்கியானங்களில் "கோயில் பத்தராவிஸ்வாமி இங்ஙனே திருத்துவர்" என்று ஆங்காங்கு எழுதியிருக்கின்றேன். இந்தஸ்வாமி இளமை தொடங்கியே தூமசகடமேறியறியாதவர். அடியேனுடைய திருத்தகப்பனுர்க்கு இவர் பரமஸ்நிக்தர். அதனுல் திருத்தகப்பனுர் திருமேனி பாங்கில்லாமலிருந்த ஸமயத்தில் அவரைக் காண்பதற் கென்றே கோயிலிலிருந்து நடைவழியாகவே காஞ்சிக்குவந்து சேர்ந்து சில நாட்கள் எழுந்தருளியிருந்தார். அப்போது தகப்பனுருடைய நியமனங்கொண்டு இந்த ஸ்வாமிபக்கலில் கத்யத்ரயம் மூலம் அதிகரித்தேன். அது பதிநான்காவதுவயதில். பிறகு இரண்டு மூன்று பரியாயம் அடியேன் கோயிலுக்கு விடை கொண்டிருந்தபோது இந்தஸ்வாமியோடு மிகநெருங்கிப் பழகியிருக்கிறேன். இவரைப் போன்ற ஜ்ஞானனுஷ்டான ஸம்பந்நர் இக்காலத்தில் ம்ருக்யரென்றே சொல்லவேணும். .... .... .... *

# ஸ்ரீ பாஷ்யாதிகரணமெழுபத்தாறு

(226—தொடர்ச்சி)

## 20. அபசூத்ராதிகரணம்.

இதுவும் முதலத்யாயம் மூன்றுவது பாதத்திலுள்ளது. இதன்கீழ் தேவதாதிகரண ப்ரமேயம் நிரூபிக்கப்பட்டது. (ஒரு திருத்தம்;—தேவதாதிகரணத்தின் முதல் ஸூத்ரம் *தத் உபர்யபி பாதராயணஸ் ஸம்பவாத்* என்பது. இதற்கு அத்யாய பாத ஸூத்ர ஸங்கியை 1—3—25 என்பதே. ஆனல் (பக்கம் 47ல்) 1—1—25 என்று விழுந்திருப்பது அச்சுப்பிழை; திருத்திக்கொள்க.) ... ... பரமபுருஷனையுபாஸிப்பதில் மநுஷ்யர்களுக்குப்போலே தேவர்களுக்கும் அதிகாரமுண்டா? என்கிற விசாரத்தில் அஃது உண்டென்று தேவதாதிகரணத்தில் ஸ்தாபிக்கப்பட்டது. ஒரு காரியத்தில் ஒருவர் அதிகாரியாகவேணுமானல் இது நமக்கு வேணுமென்கிற அபேக்ஷையும் அதற்குரிய ஆற்றலுமாகிற இரண்டு வேண்டும். இவையே அர்த்தித்வ ஸாமர்த்தியங்களெனப்படுவன. இது மநுஷ்யர்களுக்குப்போல தேவர்களுக்குமுண்டாதலால் அவர்களுக்கும் பரமபுருஷனையுபாஸிப்பதில் அதிகாரம் தடையற்றதென்று அவ்வதிகரணத்தில் நிரூபிக்கப்பட்டது. அந்த அர்த்தித்வ ஸாமர்த்தியங்கள் சூத்ரனுக்கும் ஸம்பவிக்கக் குறையில்லாமையாலே ப்ரஹ்மவித்யையில் அவனுக்கும் அதிகாரமுண்டோவென்கிற சங்கையில் இல்லையென்று ஸ்தாபிப்பதற்காக இவ்வதிகரணம் ப்ரவ்ருத்தமாகிறது. ஏழு ஸூத்ரங்கள் கொண்டது இவ்வதிகரணம். அதில் முதல் ஸூத்ரம்

**ஸூ. சுகஸ்ய ததநாதரச்ரவணத் ததாத்ரவணத் ஸூச்யதே ஹி 1-3-33.**

சூத்ரனுக்கு வேதத்தில் அதிகாரமில்லையென்பது ஸித்தம். அன்றியும், யஜுர்வேதத்தில் ஏழாவது காண்டம் முதல் ப்ரச்நம் முதலநுவாகத்தில் ***தஸ்மாத் சூத்ரோ யஜ்ஞே அநவக்ல்ப்த:*** என்று சூத்ரனுக்கு யஜ்ஞாதிகாரமில்லையென்று ஸ்பஷ்டமாகவே மறுக்கப்பட்டிருக்கின்றது. இப்படியிருக்க சூத்ரனுக்கு ப்ரஹ்மவித்யையில் அதிகாரமுண்டா இல்லையா என்கிற விசாரத்திற்கு ப்ரஸக்தியே கிடையாதேயென்று நினைக்கக்கூடும். கேண்மின்; அக்நிவித்யாஸாத்யங்களான கருமங்களில் சூத்ரனுக்கு அதிகாரமில்லையாகிலும் பரப்ரஹ்மோபாஸனமென்பது மனோவ்ருத்தி மாத்திரமேயாதலால் அதில் அதிகாரம் கூடாமையில்லை. உபாஸனத்திற்கு சாஸ்த்ரோக்தங்களான கருமங்கள் அபேக்ஷிதமென்பதை ஒப்புக்கொள்வோம். அந்தந்த வர்ணச்ரமங்களுக்கு ஏற்ற கருமங்களே அபேக்ஷிதமாதலால் சூத்ரனுக்குத் தன் வருணத்திற்கேற்றவாறு முந்தின வருணத்தவர்களுக்குச் செய்யும் சுச்ரூஷையே கருமமாதலால் அந்த கர்மாநுஷ்டானத்திற்குக் குறையில்லையே. இவனுக்கு வேதாத்யயனமும் வேதாந்தச்ரவணமும் இல்லையாகிலும் இதிஹாஸ புராண ச்ரவணம் குறையற்றதேயன்றே. *ச்ராவயேச் சதுரோ வர்ணாந் க்ருத்வா ப்ராஹ்மணமக்ரத:* என்று ப்ரமாணமுமுள்ளது. சூத்ரர்களான விதுராதிகள் ப்ரஹ்மநிஷ்டர்களென்பதை இதிஹாஸபுராணங்களில் காணுகின்றோம். இவையெல்லாவற்றுக்கும் மேற்பட ச்சாந்தோக்யத்தில் ஸம்வர்க்கவித்யையில் சூத்ரனுக்கு [ஜாநச்ருதிக்கு] ப்ரஹ்மவித்யையில் அதிகாரம் காணப்படுகிறது. (எங்ஙனேயென்னில்;) சுச்ரூஷுவாக வந்த

ஜாநச்ருதியை ஆசார்யரான ரைக்வர் **சூத்ர!** என்று விளித்து அவனுக்கு ப்ரஹ்மவித்யையை உபதேசித்திருப்பதாகத் தெரியவருகிறது—***ஆஜஹாரேமாச் சூத்ர! அநேநைவ முகேந ஆலாபயிஷ்யதா:*** என்கிற ரைக்வவாக்யத்தில் ஜாநச்ருதியென்பவன் சூத்ரனாக விளிக்கப் பட்டு அவனுக்கு ப்ரஹ்மவித்யோபதேசம் செய்யப்பட்டிருக்கின்றது. ஆகவே சூத்ர னுக்கும் ப்ரஹ்மவித்யாதிகாரமுண்டென்று பூர்வபக்ஷம் ப்ராப்தமாக, அஃது இல்லை யென்று மறுக்கப்படுகிறது இவ்வதிகரணத்தில்.

சூத்ரனுக்கு ப்ரஹ்மவித்யாதிகாரம் ஸம்பவிக்கமாட்டாது. ஏன்? யோக்யதைக் குறுப்பான அர்த்தித்வ ஸாமர்த்தியங்களிரண்டனுள் ஸாமர்த்தியமென்பது கிடையாதத லால். அர்த்தித்வமிருக்கலாம்; அதனால் பயனில்லை. ஸாமர்த்த்யமில்லாத அர்த்தித்வம் நிஷ்ப்பலம். வேதாத்யயனத்தில் அதிகாரமில்லையென்றபோதே இது ஸித்தம். இதிஹாஸ புராண ச்ரவணயோக்யதை யுண்டேயென்னில்; அதனால் பாபக்ஷயம் முதலான பலன் ஸித்திக்குமேயல்லது உபாஸனம் ஸித்திக்கமாட்டாதென்பது உறுதி. ஸம்வர்க்க வித்யையில் சுச்ரூஷுவாக வந்த ஜாநச்ருதியை ஆசார்யரான ரைக்வர் **சூத்ர!** என்று விளித்து ப்ரஹ்மவித்யோபதேசம் பண்ணினாரென்பது பற்றிய தத்துவம் கேளீர்; ***சுகஸ்ய ததநாதரச்ரவணாத்** இத்யாதியான ப்ரக்ருத (ப்ரதம) ஸூத்ரத்தில் அந்த தத்துவமே விளக்கப்பட்டுள்ளது இவ்விடத்தில் **சூத்ர!** என்கிற ஸம்போதனமானது சோகமடைந் திருப்பவனே! என்னும் பொருளுடையதேயல்லது சூத்ரஜாதீயனே! என்னும் பொரு ளுடையதன்று—என்பது ஸூத்ரத்தின் தேர்ந்த பொருள். ஜாநச்ருதியின் இதிஹாஸ முணர்ந்தால் இது விசதமாகும்.

அந்த இதிஹாஸம் வருமாறு;—க்ஷத்ரியனான ஜாநச்ருதியென்பவன் அன்னதானங் களும் த்ரவ்யதானங்களும் விசேஷமாகச் செய்துகொண்டு பரமதார்மிகனாயிருந்துவந்தான். ஆனால் அவனுக்கு ப்ரஹ்மஜ்ஞானம் மட்டுமில்லாமலிருந்தது. அவன் செய்த பல தருமங் களினால் மிக மகிழ்ச்சியடைந்த மஹாத்மாக்களிருவர் அந்த ஜாநச்ருதிக்கு ப்ரஹ்மஜ் ஞானத்தில் ருசியையுண்டாக்குவதற்காக இரண்டு ஹம்ஸங்களின் வடிவெடுத்து இரவில் அவனுக்கு அணித்தாகப் பறந்து செல்லுகையில் ஒரு ஹம்ஸம் மற்றொரு ஹம்ஸத்தை நோக்கிச் சொல்லிற்று—அப்பா பல்லாக்ஷனே! இங்கே ஜாநச்ருதியென்கிற மஹானுடைய தேஜஸ்ஸானது வானளாவியிருக்கின்றது; அதில் நீ கொளுந்தாதபடி உன்னை நோக்கிக் கொள் என்றது. இங்ஙனே ஜாநச்ருதியை ப்ரசம்ஸித்துச் சொன்ன வார்த்தையைக் கேட்ட மற்றொரு ஹம்ஸமானது—'அப்பா! இந்த ஜானச்ருதியை ப்ரஹ்மவித்துக்களில் தலைவரான ரைக்வராக நினைத்துவிட்டாயோ? இவன் மஹா தார்மிகனாயிருந்தாலும் ப்ரஹ்மஜ்ஞானமில்லாதவனாகையாலே மஹாஜ்ஞானிகரான ரைக்வரை யொத்தவனா வனோ?' என்று ஹேளனமாகச் சொல்லிப் போயிற்று. இங்ஙனே தன்னையிழித்துக் கூறியதைக் கேட்ட ஜாநச்ருதி தனக்கு ப்ரஹ்மஜ்ஞானமில்லாமையினாலே இப்படி கர்ஹையுண்டாயிற்றென்று மனம் நொந்து ரைக்வரிடம் ப்ரஹ்மஜ்ஞானம்பெற விரும்பி ரைக்வரிருக்குமிடத்தைத் தெரிந்துவர ஒருவனையனுப்பித் தெரிந்துகொண்டபின் தானே ரைக்வரிடம் சென்று தன் சக்திக்கியன்ற குருதக்ஷிணையை ஸமர்ப்பித்துத் தனக்கு

ப்ரஹ்மோபதேசம்பண்ண வேண்டினவளவில் ரைக்வர் தமது யோக மஹிமையினால் கீழே நடந்த செய்தியையுணர்ந்து இவன் ஹம்ஸபக்ஷியின் அவஹேளன வாக்கியத்தைக் கேட்டு சோகத்தோடு ஓடிவந்திருக்கிறானென்றறிந்து வித்யோபதேசம் பெறுவதற்கு முக்கியமான நிர்வேதம் இவனுக்குள்ளதாகையாலே இவன் உபதேசபாத்திரமே யென்றுகொண்டு சூத்ர! என்றழைத்திருப்பது சோகமுடையவனே! என்கிற பொருளைக்கொண்டுதானென்று அறுதியிடத் தட்டில்லை. "சோசதீதி—சூத்ர:" என்று வ்யுத்பத்தி காண்க இதன் மேல் ஒரு சங்கை தோன்றும்; "யோகாத் ரூடிர் பலீயஸீ" என்பது நியாயமாகையாலே சூத்ரபதத்திற்கு சதுர்த்தஜாதியில் ரூடியிருக்கையாலே அது பிரபலமன்றோவென்று; **"க்ஷத்ரியத்வகதேச்ச"** இத்யாதிகளான மேல் ஸூத்ரங்களினால் ஜாநச்ருதிக்கு க்ஷத்ரிய ஜாதீயத்வம் ஸ்பஷ்டமாகக் காண்கிறதென்று நிரூபிக்கப்படுவதுகொண்டு தெளிக.

ஸூத்ரத்தின் பொருளாவது—**சுக் அஸ்ய ஸூச்யதே ஹி**=இந்த ஜாநச்ருதி யென்னும் க்ஷத்ரியனுக்கு சோகமுள்ளமை ஸூசிதமாகிறது; (எதனாலென்னில்;) **தத் அநாதரச்ரவணாத்**—அந்த ஹம்ஸபக்ஷியின் இழிவுரையைக் கேட்டதனால், **ததா ஆத்ரவணாத்**—அப்போதே ரைக்வரிடம் விரைந்தோடி வருகையினாலே என்றபடி. ஆக, சூத்ரனுக்கு ப்ரஹ்ம வித்யாதிகாரமில்லையென்று முடிந்தது. ... ... ❋

அபசூத்ராதிகரணம் முற்றிற்று.

## 21. வாக்யாந்வயாதிகரணம்.

(இது முதலத்யாயம் நான்காவது பாதத்திலுள்ளது.)

ப்ருஹதாரண்யகத்தில் மைத்ரேயீ ப்ராஹ்மணமென்பது ஒரு பாகம். அதில் யாஜ்ஞவல்க்யரை நோக்கி மைத்ரேயியானவள் அம்ருதத்வோபாயம் சொல்லுமாறு கேட்கையில் அவர் *ந வா அரே பத்யு: காமாய பதி: ப்ரியோ பவதி, ஆத்மநஸ் து காமாய பதி: ப்ரியோ பவதி* என்று தொடங்கி ***ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய:*** என்று முடிவாகச் சொல்லியுள்ளார். இங்குள்ள **ஆத்மா** என்கிற பதம் கருமபலன்களை யநுபவிக்கிற ஜீவாத்மாவைச் சொல்லுமதன்று; *தமேவம் வித்வாந் அம்ருத இஹ பவதி* [புருஷ ஸூக்தே] இத்யாதிகளிற் சொல்லுகிற பரமாத்மாவையே நோக்கியது; அல்லாவிடில் மேல் வாக்யம் பொருந்தாது; அது பொருந்துவதற்காகப் பரமாத்மபரமாகத்தான் கொள்ள வேணும்—என்றறுதியிடுவது இவ்வதிகரணத்தின் ப்ரமேயம். இவ்வாத்மாவுக்கு ஸத்ய காமத்வ ஸத்யஸங்கல்பத்வாதிகளை மேலே சொல்லியிருக்கையாலே அது பரமாத்மாவுக்கே உபபந்நமாகக் கூடியதாகையாலே என்றதாயிற்று. பரமாத்மா விவக்ஷிதனானால் ஜீவாத்ம வாசகமான (ஆத்மா) என்கிற சப்தத்தை ப்ரயோகிப்பானேன்? பரமாத்மாவென்றே ப்ரயோகிக்கலாகாதா? என்கிற இக்கேள்விக்கு ஸூத்ரகாரரால் மேலே மூன்று ஸூத்ரங் களினால் ஸமாதானம் தெரிவிக்கப்பட்டுள்ளது. அடைவே ஆச்மரத்த்ய மதம், ஔடு

லோமி மதம், காசக்ருத்ஸ்நமதம் என மூவருடைய மதம் காட்டப்பட்டுள்ளது. (1) ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு கார்யகாரண பாவம் ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கை யாலே அதனுல் அவர்களுக்கு அபேதம் ஏற்படுகிறது. அதைத் தெரிவிப்பதற்காகப் பரமாத்ம ஜீவாத்மாக்களுக்கு ஐக்யோக்தியுள்ளதென்று ஆச்மரத்ய மதம். (2) இனி ஔடுலோமி மதம்; கீழே காட்டிய ஆச்மரத்ய மதத்தில் ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவிட மிருந்து உத்பத்தியைக் கொள்ளுகையாலே *ந ஜாயதே ம்ரியதே வா விபச்சித்* இத்யாதி ப்ரமாணங்களோடு அது விரோதிக்கையாலும் மற்றும் அநேக தோஷ ப்ரஸங்கத்தாலும் ஆச்மரத்ய மதம் ஸாதுவன்றென்றுகொண்ட ஔடுலோமியானவர்—முக்தி தசையில் ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவோடு அபேதம் ச்ருதி ஸித்தமாயிருக்கையாலே முக்தி தசையில் பவிஷ்யத்தான ஜீவாத்ம பரமாத்ம அபேதத்தை யவலம்பித்து ஐக்யம் சொல்லிற்ருக நிர்வஹித்தார். (3) இனி காசக்ருத்ஸ்நமதம். கீழே விவரித்த ஔடுலோமி மதத்தில் மோக்ஷம் வரையில் ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு பேதமுள்ளதென்றும், முக்தி தசையில் அபேதமென்றும் கொள்ளப்படுகிறவிது ப்ரமாண விருத்தம். வெவ்வேறுபட்ட பொருள்கள் ஒன்ருேடொன்று சேருமேயொழிய ஐக்கியத்தை யடையமாட்டாவாதலால் இதையறிந்த காசக்ருத்ஸ்நர்—பரமாத்மா ஜீவாத்மாவினுள் அந்தராத்மாவாக இருப்பதும், ஜீவாத்மாவுக்குப் பரமாத்ம சரீரத்வமும் ப்ரமாண ஸித்தமாகையாலே ப்ரக்ருதத்தில் ஜீவாத்மவாசியான ஆத்மசப்தம் பரமாத்மவாசியாகுமென்று நிர்வஹித்தார்.

இங்ஙனே வரிசையாக மூன்று மதங்களை யுதாஹரித்த ஸூத்ரகாரர் மேலே நான்காவது மதத்தைச் சொல்லாமையினுல் காசக்ருத்ஸ்நமதமே ஸூத்ரகாராபிமத மென்பது நிஸ்ஸந்தேஹமாக நிர்ணயிக்கப்படுகிறது. இது விசிஷ்டாத்வைதத்திற்கு மிகவிணங்கினது. அத்வைதிகளும் காசக்ருத்ஸ்நமதமே ஸூத்ரகாராபிமதமென்று இசைந்துவைத்து (**அவஸ்திதே:**) என்கிற பதத்திற்கு—பரமாத்மாவே ஜீவாத்மாவாக இருப்பதனுலேயென்று பொருள் கூறுகிருர்கள். ப்ரக்ருதத்தில் ஐக்கியத்தைப் பொருந்த விடவேணும்; இங்ஙனே பொருள் கொண்டாலும் ஐக்கியம் பொருந்திவிடுகின்றதன்ருே. காசக்ருத்ஸ்நர் சரீராத்மபாவத்தை யவலம்பித்தே ஐக்கியத்தைப் பொருந்தவிட்டாரென்று ஏதுக்கு ஒப்புக்கொள்ளவேணு மென்கிருர்களவர்கள். இங்கு நாம் முக்கியமாகச் சொல்லுவதைக் குறிக்கொள்ளவேணும். **அவஸ்திதி:** என்கிற சப்தமானது "பூதலே கட: அவதிஷ்டதே. ப்ராஸாதே தேவதத்த: அவதிஷ்டதே" இத்யாதி வ்யவஹாரங்களிற் போல ஒரு வஸ்துவில் மற்ருெரு வஸ்து இருப்பதைத்தான் சொல்லக்கடவது. "ப்ருதிவ்யாம் திஷ்டந், அப்ஸு திஷ்டந், தேஜஸி திஷ்டந், வாயௌ திஷ்டந், ஆகாசே திஷ்டந், ஆத்மநி திஷ்டந்" இத்யாதிகளான உபநிஷத்வாக்யங்களில் பலகால் காணப்படுகிற ஷ்டாதாதுப்ரயோகத்தை யடியொற்றியே (அவஸ்திதே:) என்கிற ஸௌத்ரப்ரயோக முள்ளதென்பதை ப்ராமாணிகர்கள் உள்ளபடியுணர்வர். பரமாத்மாதானே ஜீவாத்மாவாக இருப்பதனுலென்கிற பொருள் ஏறிட்டாலும் ஏறமாட்டாது. ... (தொடரும்)

॥ श्रीरस्तु ॥

श्रीकोमलवल्लीसमेत श्रीयथोक्तकारिस्वामिने नमः



श्रीमते रामानुजाय नमः । श्रीमद्वरवरमुनये नमः

## ॥ ※ ॥ श्रीयथोक्तकारि – सुप्रभातम् ॥ ※ ॥

श्रीकाञ्ची प्रतिवादिभयङ्कर - अण्णङ्गराचार्य विज्ञापितम्

ஸ்ரீகாஞ்சி P. B. அண்ணங்கராசாரியர் விண்ணப்பம் செய்த

# ஸ்ரீயதோக்தகாரி ஸுப்ரபாதம்

கௌஸல்யாஸுப்ரஜா ராம பூர்வா ஸந்த்யா ப்ரவர்த்ததே,
உத்திஷ்ட நரசார்தூல கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம்.

உத்திஷ்டோத்திஷ்ட கோவிந்த உத்திஷ்ட கருடத்வஜ,
உத்திஷ்ட கமலாகாந்த த்ரைலோக்யம் மங்களம் குரு.

सरोमुनीन्द्रादिसमस्तभक्ताः समुद्गृणन्तो मधुराः स्वसूक्तीः ।
श्रियःपते! त्वां हि सिसेविषन्ते यथोक्तकारिन्! तव सुप्रभातम् ॥ १

ஸரோமுநீந்த்ராதிஸமஸ்தபக்தா: ஸமுத்க்ருணந்தோ மதுரா: ஸ்வஸூக்தீ: 1
ச்ரிய:பதே த்வாம் ஹி ஸிஸேவிஷந்தே யதோக்தகாரிந் தவ ஸுப்ரபாதம்.

यथार्थवाचो यशसा समृद्धा भूतादयो योगिवराः प्रसिद्धाः ।
द्वारि स्थिता स्तानवलोकयेथा यथोक्तकारिन्! तव सुप्रभातम् ॥ २

யதார்த்தவாசோ யசஸா ஸம்ருத்தா பூதாதயோ யோகிவரா: ப்ரஸித்தா: 2
த்வாரி ஸ்திதாஸ் தாநவலோகயேதா யதோக்தகாரிந் தவ ஸுப்ரபாதம்.

महत्समाख्यातमुनीन्द्रमुख्या मनीषिवर्गा महितप्रभावाः ।
गायन्ति सूक्तानि फणीन्द्रशायिन्! यथोक्तकारिन्! तव सुप्रभातम् ॥ ३

மஹத்ஸமாக்க்யாதமுநீந்த்ரமுக்யா: மநீஷிவர்க்கா மஹிதப்ரபாவா: 3
காயந்தி ஸூக்தாநி பணீந்த்ரசாயிந் யதோக்தகாரிந் தவ ஸுப்ரபாதம்.

श्रीभक्तिसारादिमहामुनीन्द्राः त्वत्पादपद्मप्रवणान्तरङ्गाः ।
कैङ्कर्यसक्ता स्समुपस्थितास्ते यथोक्तकारिन्! तव सुप्रभातम् ॥ ४

ஸ்ரீபக்திஸாராதிமஹாமுநீந்த்ரா: த்வத்பாதபத்மப்ரவணாந்தரங்கா:, 4
கைங்கர்யஸக்தாஸ் ஸமுபஸ்திதாஸ் தே யதோக்தகாரிந் தவ ஸுப்ரபாதம்.

श्रीमच्छठारातिमुनीश्वरास्ते सहस्रगीत्यादि समुद्गृणन्तः ।
स्वकीयभक्तै स्सहिता स्समेताः यथोक्तकारिन्! तव सुप्रभातम् ॥ ५

ஸ்ரீமச்சடாராதிமுநீச்வராஸ் தே ஸஹஸ்ரகீத்யாதி ஸமுத்க்ருணந்த:, 5
ஸ்வகீயபக்தைஸ் ஸஹிதாஸ் ஸமேதா யதோக்தகாரிந் தவ ஸுப்ரபாதம்.

भक्ताग्रगण्याः कुलशेखराद्या अर्घ्यादियुक्ता स्समुपागतास्ते ।
तत्तादृशान् प्रातरनुग्रहीतुं यथोक्तकारिन्! तव सुप्रभातम् ॥ ६

பக்தாக்ரகண்யா: குலசேகராத்யா அர்க்க்யாதியுக்தாஸ் ஸமுபாகதாஸ் தே
தத்தாத்ருசாந் ப்ராதரநுக்ரஹீதும் யதோக்தகாரிந் தவ ஸுப்ரபாதம். 6

श्रीभट्टनाथादिमहामुनीन्द्राः सुगन्धिपुष्पाणि समाददानाः ।
कुतूहलाढ्या स्समुपस्थितास्ते यथोक्तकारिन्! तव सुप्रभातम् ॥ ७

ஸ்ரீபட்டநாதாதிமஹாமுநீந்த்ரா: ஸுகந்திபுஷ்பாணி ஸமாததாநா:,
குதூஹலாட்யாஸ் ஸமுபஸ்திதாஸ் தே யதோக்தகாரிந் தவ ஸுப்ரபாதம். 7

भक्तांघ्रिरेणुप्रमुखास्सुभक्ता आनन्दसंदोहसमृद्धचित्ताः ।
नानोपहारैस्सहितास्समेताः यथोक्तकारिन्! तव सुप्रभातम् ॥ ८

பக்தாங்க்ரிரேணுப்ரமுகாஸ் ஸுபக்தா ஆநந்தஸந்தோஹஸம்ருத்தசித்தா:,
நாநோபஹாரைஸ் ஸஹிதாஸ் ஸமேதா யதோக்தகாரிந் தவ ஸுப்ரபாதம். 8

प्रेमार्द्रचित्ता मुनिवाहनाद्याः प्रेम्णा गृणन्तो विविधं सुगीतम् ।
समागतास्तेषु भृशं दयेथा यथोक्तकारिन्! तव सुप्रभातम् ॥ ९

ப்ரேமார்த்ரசித்தா முநிவாஹநாத்யா: ப்ரேம்ணா க்ருணந்தோ விவிதம் ஸுகீதம்,
ஸமாகதாஸ் தேஷு ப்ருசம் தயேதா: யதோக்தகாரிந் தவ ஸுப்ரபாதம் 9

श्रीमत्कलिध्वंसिमहामुनीन्द्र स्सर्वैश्च भक्तैस्सहितस्समागात् ।
भक्तानिमान् क्षिप्रमनुग्रहीतुं यथोक्तकारिन्! तव सुप्रभातम् ॥ १०

ஸ்ரீமத்கலித்வம்ஸி மஹாமுநீந்த்ரஸ் ஸர்வைச்ச பக்தைஸ் ஸஹிதஸ் ஸமாகாத்,
பக்தாநிமாந் க்ஷிப்ரமநுக்ரஹீதும் யதோக்தகாரிந் தவ ஸுப்ரபாதம். 10

श्रीनाथयोगी यतिराजयोगी लोकार्यवर्यो वरयोगिवर्यः ।
अन्ये च सर्वे गुरवस्समायन् यथोक्तकारिन्! तव सुप्रभातम् ॥ ११

ஸ்ரீநாதயோகி யதிராஜயோகி லோகார்யவர்யோ வரயோகிவர்ய:
அந்யே ச ஸர்வே குரவஸ் ஸமாயந் யதோக்தகாரிந் தவ ஸுப்ரபாதம். 11

सामगाननिरता इह भक्ताः श्रीयथोक्तभगवत्पदसक्ताः ।
सुप्रभातसमये स्तुतिमेतां संपठन्तु विलसन्तु समृद्धाः ॥ १२

ஸாமகாநநிரதா இஹ பக்தா: ஸ்ரீயதோக்தபகவத்பதஸக்தா:
ஸுப்ரபாதஸமயே ஸ்துதிமேதாம் ஸம்படந்து விலஸந்து ஸம்ருத்தா:. 12

यथोक्तकारिसुप्रभातमेतदन्वहं च ये पठन्ति शुद्धभक्तिनिघ्नमानसा मनीषिणः ।
भजन्ति ते श्रियं धियं समस्तसम्पदाढ्यतां यथोक्तकृन्महाकृपां च नित्यमस्तु मङ्गलम् ॥

யதோக்தகாரிஸுப்ரபாதமேததந்வஹஞ்ச யே படந்தி சுத்தபக்திநிக்நமானஸா மநீஷிண:
பஜந்தி தே ச்ரியம் தியம் ஸமஸ்தஸம்பதாட்யதாம் யதோக்தக்ருந்மஹாக்ருபாஞ்ச,
நித்யமஸ்து மங்களம்.

ஸ்ரீயதோக்தகாரி ஸுப்ரபாதம் முற்றிற்று.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:- ஸ்ரீமத்வரவரமுநயே நம:-

# ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யம்-இரண்டாவது ஆஹ்நிகம்.

காஞ்சீவாதிபயங்கரஸூரிக்ருதௌ ஸம்ப்ரதாயஸாம்ராஜ்யே,
த்வைதீயிகம் ஹ்யாஹ்நிகம் அத்ய ப்ராரப்யதே ஸதாம் ப்ரீத்யை.

## ஸிம்ஹாவலோகநந்யாயேந சில ஸமுத்போதனங்கள்:-

கீழே நாற்பது வாக்யச்ரேணிகளை வாசித்து மகிழ்ந்த வித்வான்களுக்கு மறந்திருக்கக் கூடிய சில முக்கிய விஷயங்களைச் சிறிது ஸமுத்போதனம் செய்து விட்டு மேல் விஷயங்களை உபஹரிப்போம். மதுராந்தகம் ஸ்வாமி தமது ஸம்ப்ர தாயஸுதா வென்னும் சுவடியை ப்ரதிபக்ஷி கண்டனமாக எழுதப்புகுந்து, ப்ரதிப க்ஷியான நாம் உலகமறிய வெளியிட்டிருக்கிற பூர்வபக்ஷங்களையோ ஆசங்கைகளையோ சோத்யங்களையோ வினுக்களையோ தொடாமலும் அவற்றுக்கு விடை கூறாமலும் அப்ரஸக்த விஷயங்களை வளர்த்திப் பத்ரபூரணம் செய்திருக்கிறாரென்று நிரூபித் தோம்; "அரை குறை வ்யுத்பத்தி அநர்த்த ஹேது" என்பதை மெய்ப்பித்திருக்கிரு ரென்று சரணாகதிகத்யபாஷ்ய ஸூக்திக்கு இவரெழுதியுள்ள விபரீதப் பொருளைக் காட்டி நிரூபித்தோம். தேசிகோக்திதூஷணத்தில் பழுத்தவரான தாதாசாரி யர் இவருடைய சுவடிக்கு ப்ரஸ்தாவனை யெழுதத் தகுதியற்றவரென்று மிகவிரி வாக விளக்கினோம். தாதாசார்யருடைய சுவடிக்கு மதிப்புரை கொடுக்கும் மதுராந்தகரும், மதுராந்தகருடைய சுவடிக்கு மதிப்புரை கொடுப்பவரான தா தாசாரியரும் ஆக இவ்விருவரும் பகவத்ராமாநுஜ தர்சனத்தைப் புகழவோ தேசிகதர்சனமென்று வாய் திறக்கவோ அவகாச லேசமும் கிடையா தென்று ஆர அமர அறிவித்தோம். *த்ருடபூர்வச்ருதோ மூர்க்க:* இதிமந்தைரிதம் ப்ரோக் தம்*க்ரந்தஜ்ஞைரபஹாஸ்யம் தத்* இத்யாதி யுபாலம்பங்களை வெளியிடுதற்கு அடியான பிராட்டியின் உபாயத்வவிசாரத்தில் இவர்கள் வாய் மூடிநிற்கவேண் டியது தவிர வேறில்லையென்று விவரித்தோம். ஸ்ரீஸூக்த பாஷ்யம் நஞ்சீயர ருளிச் செய்த தன்றென்று நிலைநாட்டினோம். [இதில் வக்தவ்ய சேஷமுண்டு; அது மேலே வரும்.] சாரீரகார்த்த நிர்ணயம் இவர்க்கில்லை யென்றதற்கு இவர் களுடைய பரம்பரையிலேயே அது அந்நாள் தொடங்கியேயில்லை யென்று உபபாதித்தோம். கீதாபாஷ்ய ஸ்ரீபாஷ்ய ஸூக்திஸமந்வயம் காணகில்லாதார்க்கு அதனை நன்கு காட்டிக் கலக்கத்தை சமிப்பித்தோம். ஸுதீவிலோசனவிஷயே புராதன கதாப்ரபஞ்சனம் பண்ணினோம். பிரதிபக்ஷி வகுப்பினரில் இரு நூறு வருடங்களுக்குமுன் ஆழ்வாரையோ எம்பெருமானாரையோ தேசிகனையோ ப்ரஸ் தாவித்த ஒரு வ்யக்தியைக் காட்டிவிட்டால் இதுகாறும் நான்கு பாஷைகளிலும் நாமெழுதி வெளியிட்டுள்ள எழு நூறு புத்தகங்களையும் கிழித் தெறிந்து விட்டுத் தலை மறைந்து காலங்கழிப்போ மென்று கோரமான சபதம் செய்திருக்கிறோம். பிரதி பக்ஷிகள் தேசிகனைப் பிடித்துக் கொண்டகாலம் இன்னதென்று விளக்கியிருக் கிறோம். எதிர்த்தலையிலுள்ள வொரு துர்ப்பிக்ஷத்தை விளக்கித் தலைக்கட்டினோம்.

ஆரியர்காள்! ஆக இவ்வளவும் பூர்வவ்ருத்தாநுஸந்தானம். நாற்பது வாக்யச்ரேணிகளின் ஸாராம்சத்தை ஸங்க்ரஹித்தோமானோம். இப்போது நாம் விமர்சிக்கும் வீரராகவாசார்ய சுவடியில் "ப்ரதி வாதிபயங்கரம் அண்ணன் அருளிச் செய்த ஸப்ததிரத்நமாலிகை" என்றும் "தொட்டயாசார்யரருளிச் செய்த வைபவப்ரகாசிகை யில்" என்றும் "பிள்ளை லோகாசார்யரருளிச் செய்த சீரொன்று தூப்பல் தனியனில்" என்றும் எழுதப்படுமவை அஸங்கத மென்ப தை உபபாதிப்போம். அப்ராமாணிகமாக ஒரெழுத்து மெழுதோம்.

## ஸப்ததிரத்னமாலிகையின்பரிஸ்திதியை விவரித்தல்:-

41. அண்ணனுக்கும் தொட்டயாசார்யருக்கும் தேசிகரிடத்தில் ப்ரதிபத்தியில்லை யென்று யாரும் சொல்லவில்லை. மஹாவித்வத் ஸிம்ஹங்களான அவ்விருவரும் அபசப்த ஜடிலமான க்ரந்தரசனை பண்ணினார்களென்று நவீனர்கள் ஆரோபணம் செய்வது அவர்களுடைய பாண்டித்யப் பெருமைக்கு இழுக்காகுமென்று பலகால் விவரித்திருக்கிறோம். முடிந்துபோன விஷயங்களை மீண்டு மீண்டும் ப்ரஸங்கித்துக் கொண்டேயிருப்பது ப்ராஜ்ஞர்களின் பணியன்று. நீதி மன்றங்களில் ஏற்கெனவே முடிந்து போன விஷயங்களை ப்ரஸங்கிக்கலாகாதென்று நிபந்தனை யுள்ளது. சுருக்கமாகக் கேளீர். வடமொழியில் (ப்ரௌடः) என்கிற சப்தம் ஸுப்ரஸித்தம். ப்ரௌடத்வம் என்னு மர்த்தம் விவக்ஷிதமானால் ப்ரௌடிः என்று ப்ரயோகிக்க வேணுமேயொழிய (ப்ரௌடிமா) என்று இமநிச் ப்ரத்யயமேற்றி ப்ரயோகிப்பது அஸாது வென்பதை வ்யாகரணத்தில் ஸ்வல்ப ப்ரவேசமுள்ளவர்களும் எளிதினுணர்வர்கள். நவீனர்கள் கல்பித்த ஸப்ததிரத்னமாலிகையில்*யஸ் ஸம்ஸ்க்ருத கவிதாயாம் ப்ரௌடிம்நா அந்வேதி கூரநாதஸூநும்* என்று காணப்படுகிற அபப்ரயோகத்தை ஸமர்த்திக்க பாணிநிப்ரப்ருதி முநித்ரயம் நேரே வந்தாலுமாகாது. அபத்த ஜடிலமாகக் கவிபண்ணுகிற இக்காலத்தவர்களின் கவிதையே அது- என்பதை நிர்ணயிக்கத் தட்டில்லை. இது கிடக்கட்டும். பெரிய தொரு அஸம்பத்தம் கேளீர். ஆசாரியர்களின் பெருமையை வெளியிடவருமவர்கள்''இவரை எல்லாரும்பழிக்கிறார்கள். எல்லாரும் பரிபவிக்கிறார்கள், எல்லாரும் தூஷிக்கிறார்கள்'' என்று இப்படியா எழுதுவர்கள்? இராமானுச நூற்றந்தாதியிலோ யதிராஜ ஸப்ததியிலோ எம்பெருமானாரைப்பற்றி இப்படி யொரு வாக்விந்யாஸம் கண்ட துண்டோ? 'உலகமெல்லாம் போற்றிப் புகழாநின்றது, என்று வெளியிடுவதன்றோ ஆசார்யஸ்துதி. இவர்கள் கல்பித்த மாலிகையில் அநுவதிக்கத் தகாத வார்த்தைகளன்றோ மலிந்துள்ளன. ''அவமாநநாம் குர்வதே''= தேசிகனைப் பரிபவப்படுத்துகிறார்கள் என்பதும், உடனே *ஹந்த ஹந்த ராமக்ருஷ்ண தூஷணபிதாயிநாம் கிம் நு சித்ரமத்ர சைத்ய ராவணா நுஸாரிணாம்*= ராவண கம்ஸ சிசுபாலாதிகள் இப்போது வந்து பிறந்திருக்கிறார்கள் என்பதும்........ .... இவையா ஆசார்யஸ்துதிகள். ''திரு மாளிகை வாசலில் இருந்து க்ரந்தாவலோகனம்செய்துகொண் டெழுந்தருளியிருந்த தேசிகனைக் காலைவாரியிழுத்துத் தெருவிலே தள்ளி நலிந்தார்கள்—மேலும் திருமுடியிலே படும்படி பாதரக்ஷைகளைத் தோரணமாகக் கட்டித் தொங்கவிட்டிருந்தார்கள்'' இத்யாதிகளையெழுதினமஹாநுபாவர்களே இத்தகைய சுலோகங்களையும் எழுதிவைத்தார்களென்பதில் ஸந்தேஹ முண்டோ?

## —:தொட்டயா சார்யஸூக்தி ஸந்நிவேசப்ரகாசநம்:—

42. சததூஷணிக்குச் சண்ட மாருத மிட்ட தொட்டயாசார்யர் ப்ரசண்ட பண்டிதர். ப்ரபல சாஸ்த்ரஜ்ஞர். அவத்ய ஜடிலமான தொரு வைபவப்ரகாசிகையை அவர் இயற்றியதாகப் பரவவிடுவது மஹத்தான ஸாஹஸம். அந்த ப்ரகாசிகையில் பெரும்பாலும் யச்சப்த தச்சப்தங்களை யிட்டுச் செய்த சுலோகங்கள் மலிந்துள்ளன. அந்தவிடங்கள் முழுவதும் அவ்யுத்பந்ந பாஷிதங்களென்பதைப் பலகால் நிரூபித்திருக்கிறோம். இவ்வந்தகரையும் இவர்க்குத் துணைவரான தாதா சாரியரையும் நோக்கிவெளியிட்டுள்ள நூல்களிலேயே இந்த நிரூபணம் விளங்கா நின்றது. பலவாண்டுகள் கழிந்து விட்டன வென்பதால் பண்டிதவுலகம் அதை மறந்திருக்கு மென்று நினைப்பது பேதைமை. அந்த தோஷங்கள் அபரிஹ்ருதங்கள், அபரிஹார்யங்கள். நம்முடைய ஸத்ஸம்ப்ரதாயார்த்த ஸாரநிதியில் பக்கங்கள் 86, 87, 88ல் விரிவாகக் கண்டு கொள்க. அங்கு முடிவாகத் தெரிவித்த விஷய மொன்றே போதும்.(அதாவது) விவாதாஸ்பதமான வைபவப்ரகாசிகையில் (கவிவாதி சிரோரத்நம்) என்பது ஆரம்ப

ச்லோகம். சிரோரத்நம் என்கிறவிது ச்ரேஷ்டார்த்தகமாக ப்ரயோகிக்கப் படுவதென்பது எங்கும் நிர்விவாதம். தேசிகனைக் கவி சிரோரத்ன மென்றால் ஒக்கும். கவிச்ரேஷ்ட ரென்றதாம். வாதிசிரோரத்ன மென்றால் ஒக்குமோ? ஒவ்வாது ஒவ்வாது. வாதி மத்தேப கண்டீரவமான ஸ்வாமியை வாதிச்ரேஷ்ட ரென்னத் தகாது. வாதிசப்த மானது எங்கும் துர்வாதிகளைத்தான் சொல்லி நிற்பது இந்தவைபவப்ரகாசிகையி லேயே (22ல்)*வாதித்விரதௌகஸிம்ஹம்* என்றும்(101ல்) *வாதித்விரதகட நாஸிம்ஹம்* என்றும் வாதியைத் தொலைக்கின்றவராகப் புகழப்படும் ஸ்வாமியை வாதிசிரோமணி யென் பது அசட்டு வார்த்தையேயாம். இப்படி ஒவ்வொரு சுலோகத்தையுமாராய்ந்தால் காவ்ய நாடகங்களை அரை குறையாக வாசித்த அக்கிலிபிக்கிலி பண்டித ரொருவர் எழுதினதே அது என்று எளிதாக அறுதியிடலாம். தேசிகனுடைய ஆசாரியர்க்கு வாதி ஹம்ஸாம்புதாசார்ய ரென்றுள்ள திருநாமமும் வாதிகளைத் தொலைப்பவரென்கிற பொருளையே வற்புறுத்தும். ஆகவே வைபவப்ரகாசிகோதாஹரணம் விபல மென் றொழிக. இதனால் தொட்டயாசார்யர் தேசிகரிடத்தில் அப்ரதிபந்நரென்றோ விப்ரதிபந்நரென்றோ சொன்னதாக ஆகாது. இந்த ப்ரகரணத்தில் அந்தகர் எழுது கிறார்-"தொட்டயாசாரியர் செய்த சண்ட மாருதத்தில் ஒவ்வொரு வாதத்தின் ஆரம்பத்திலும் தேசிகன் பக்கல் தமக்கு அஸாதாரணமான பக்திவிசேஷத்தை வெளி யிட்டருளுகிறார்" என்று. இதனால் இந்த அந்தகர் சண்டமாருதமென்று ஒருக்ரந்த முள்ளதாகக் கேள்விப்பட்டவரே யொழிய அதைக்கண்டவரன்று என்பது வெட்ட வெளிச்சமாயிற்று. "ஒவ்வொரு வாதத்தின் ஆரம்பத்திலும்" என்பது தவறு. சில வாதங்களிலுண்டு. ஆசார்யத்வப்ரதிபத்தி, பண்டிதத்வப்ரதிபத்தி என்று இரண்டு கொண்டார் தொட்டயாசார்யர். அவர் தமக்கு ஆசார்யரான வாதூலஸ்ரீநிவாஸா சார்யஸ்வாமியைச் சேர்த்தே உபச்லோகித்துவருகிறார். அவரிடத்தில் ஆசார்யப்ரதி பத்தியையும் இவரிடத்தில் பண்டிதப்ரதிபத்தியையும் காட்டியுள்ளார். ஆசார்யப்ரதி பத்தியையேஅபரிமிதமாகக் காட்டியிருக்கிறா ரென்றாலும் இது ஆக்ஷேபார்ஹமன்று. அதனால் உமக்கு என்னலாபம்? என்பதன்றோ நமது கேள்வி? இதற்குவிடையிறுக்க வேறொரு பிறவியன்றோ பிறக்கவேணும், அவருடைய ஸ்ரீஸூக்திகளுக்குப் புறம் பான மதமன்றோ நீங்கள் பற்றியிருப்பது இதை எத்தனை தடைவை சொல்லுவது? எத்தனை தடவை எழுதுவது? சூடு சுரணையில்லையே உங்களுக்கு.

## சோம்பலை விட்டு எத்தனை தடவையும் எழுதுவோம்

43. ஆழ்வார் எம்பெருமானுக்கு இட்டருளும் விளிகளில் *சோம்பாது இப் பல்லுருவையெல்லாம் படர்வித்த வித்தா!* என்று (பெரியதிருவந்தாதியில்) ஒரு விளியிடுகிறார். இதை பட்டர் *நிஸ்தந்த்ராலோஸ் தவ நியமதஃ* என்று அநுபா ஷிக்கிறார். எம்பெருமான் தான் செய்யும் ஸ்ருஷ்டி பழுதுபட்டாலும் என்றேனு மொருநாள் பயன்படுமென்று மநோரதித்துச் சோம்பலின்றிக்கே மென்மேலும் ஸ்ருஷ்டிபண்ணிப் போருமாபோலே நாமும் சோம்பாதே உண்மைப் பொருள்களை உலகமறிந்துய்ய உரைத்தே வருவோம். *உத்பத்ஸ்யதே மம து கோபி ஸமாந தர்மா* என்றானே பவபூதிமஹாகவி. தேசிகஹ்ருதயம் என்கிற நம்முடைய ஒரு நூலே போதுமானது. வெளிச்சங்காண ஒரு தீபமே போதும். அந்தகனுக்குக் கதிராயிர மிரவி கலந் தெரித்தாலும் பயனில்லை யந்தோ.

## —*அபரிசிதஸம்ப்ரதாயை:* என்ற சுலோகத்தின் தத்துவம்.—

44. கல்பித மென்று கீழே நாம் ஸ்தாபித்த வைபவப்ரகாசிகையில் *அபரி சித ஸம்ப்ரதாயைः அவிதிநயதிராஜஸூக்திதாத்பர்யைः. அசமித குத்ருஷ்டிகர்வைः அலமலமந்யைः அநாகமாந்தார்யைः.* என்றொரு சுலோகமிருப்பதாகக் காட்டு கிறார் அந்தகர். இதன் தத்துவம் கேளீர். அண்ணா பணித்த ஸ்ரீவரவரமுநிசதகத்தில்.

"அவாக்பூஷாஜுஷ்டை: அபுவநகுருப்ரேமபரிதை:
அமூலர்க்ஷோத்பூதை: அவரதகுரூபாஸிதபதை:,
க்ருதம் தைஸ் தைஸ் ஸர்வைர் குருபி: அமஹாயோகிபிரிதி
வ்யவஸ்யந்தஸ் ஸந்தோ ஹ்ருதி மம லஸந்து ப்ரதிகலம்.'!

என்றுள்ள கம்பீரமான ச்லோகத்திற்கு ப்ரதியாகக் கல்பிதம் இந்த சுலோகம் என்பதை ப்ராமாணிகர் பகர்வர். இதில் பிணக்குவேண்டா. 'அபரிசிதஸம்ப்ர தாயை:' என்று காட்டும் சுலோகமே ஸ்வதஸ்ஸித்தமாயிருக்கட்டுமே. தேசிகனுக் குள்ள அபரிச்சேத்யமான பெருமையை இல்லை செய்வாரார் கொல்? அதை யெடுத்துரைப்பதற்கு இவர்கள் அநதிகாரிகள் என்னுமித்தனையே யன்றேவுள்ளது. வேதத்தின் சிறப்பைப் பேச வேதவிதூஷகர்களோ அதிகாரிகள்?

## சீரொன்று தூப்புலின் சீர்மை விளக்கம்

**45.** எழுதுகிறுர் அந்தகர் (பக்கம்8ல்)- "லோகாசார்யரும் * சீரொன்று தூப் புல் தனியன் மூலமாய் தேசிக ஸம்பிரதாயத்தின் பெருமையை வெளியிட்டருளி னுர்; அதாவது * சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான், பாரொன்றச் சொன்ன பழமொழியுள்-ஓரொன்றுதானே அமையாதோ தாரணியில்வாழ்வார்க்கு, வானேறப்போமளவும் வாழ்வு.* என்று" இதி. இதைப்பற்றி நூறு தடவை எழு தியாயிற்று, நூற்றேராவது தடவையாக எழுதுகிறேம். பிள்ளைலோகாசாரியரும் வேதாந்தவாசிரியரும் ஸமகாலத்தவர்களாக இருந்தால், நன்னூலில் "தன்னுசிரியன் தன்னெடு கற்றேன், தன்மாணுக்கன் தகுமுரைகாரனென்று, இன்னேர் பாயிரமி யம்புதல் கடனே" என்னுஞ் சூத்திரத்தில் சிறப்புப்பாயிரம் கூறுதற்கு உரிமையா ளர்களை உரைக்குமிடத்து முந்துறமுன்னம் 'தன்னுசிரியன்' என்று ஸ்வாசார்யனை யெடுத்திருப்பதால் லோகாசாரியர் தேசிகனுக்கு ஆசார்யரான முறையில் இப்பாயி ரம்.கூறினுரென்பது ஸம்பாவிதமாகும். தேசிகன் நம் பெருமாள் ஸன்னிதிக்கு எழுந் தருளின காலத்தில் பிள்ளைலோகாசாரியரும் அவரது திருத்தம்பியாரான அழகிய மணவாளப்பெருமாள் நாயனுரும் ச்ருதப்ரகாசிகாபட்டரும் மற்றும் சில ஆசாரியர் களும் பெருமாளையெழுந்தருளப் பண்ணிக் கொண்டு வெளியேறினவர்களாகையா லும்அவர்கள் மீண்டும் கோயில்வந்து சேராமையினுலும், பிள்ளை லோகாசாரியரின் சிஷ்யவர்க்கத்தையடிபணிந்தே தேசிகன்உஜ்ஜீவித்தவரென்பதுஅவருடையஸ்ரீஸூக் திகளைக் கொண்டேபரக்க நிரூபிதமாகையாலும் *சீரொன்று தூப்பல் என்னுஞ்செய்யுள் நவீநகல்பிதமென்னத் தட்டுண்டோ? அப்பயதீக்ஷிதருடைய காலத்திற்குப்பின் தோன்றிய தூப்பலென்னுஞ்சொல் புகுந்திருப்பதொன்றே இதனுடைய நவீநத்வ த்தை நிலை நாட்டித்தரும்; இது கண்ணழிக்கமுடியாத வ்யாப்தியன்றே. ஆக ஒருவர் மாறி ஒருவராகச் சீரொன்று தூப்பலைக் காட்டிக்கொண்டிருப்பது அபஹாஸ்ய மென்று முடிக்கப்பட்டது.

## *கர்த்தவ்யம் ஸக்ருதேவச்லோகத்தின் தத்துவம்

**46.** பிள்ளைலோகாசார்யருடைய ஸ்ரீஸூக்திகளை தேசிகன் ஸேவிக்கப் பெற்ற வரேயல்லது இவருடையநூல்களை அவ காண ப்ரஸக்தியே யில்லையாயிற்று. உண் மையில் பிள்ளைலோகாசாரியர் திருநாடலங்கரித்த பிறகே தேசிகன் நூல்களெழு தத் தொடங்கினவர். இது காலவிமர்சத்தினுல் தேறும் தத்துவம். ஏவஞ்ச, தேசி கனுடைய சொற்களோ கருத்துக்களோ ஸ்ரீலோகாசார்யரஹஸ்யங்களில் இடம் பெறுதற்கு அவகாசமே கிடையாது. லோகாசார்யருக்குப் பிற்பட்டவரும் தேசி கனுடைய முதுமையில் ஜீவித்திருந்தவருமான வாதிகேஸரிஜீயர் தம்முடைய தத் வதீபம் முதலிய நூல்களில் தேசிகோக்திகளையுதாஹரித்திருப்பது ஸம்ப்ரதிபந்நம். *கர்த்தவ்யம் ஸக்ருதேவ* என்கிற தேசிகனுடைய சுலோகம் பிள்ளைலோகாசார்யரால்

உதாஹ்ருதமென்பது அஸம்பாவிதம். திருநெடுந்தாண்டகத்தில் *மைவண்ண நறுங்குஞ்சி பாசுரத்திற்கு *கஜ்ஜலாகாரஸௌகந்த்ய வஹாலக நிகும்பநம், விவ்ருணோதி ஸதாம் ப்ரீத்யை கலிவித்வேஷிகிங்கரः.* என்று தொடங்கியுள்ள பெரிய வியாக்கியானம் பட்டரருளிச்செய்தது. நம்பிள்ளையருளிச்செய்ததென்பாருமுளர். பட்டரருளிச்செய்ததாகக் கொள்ளுமளவில் கலிவித்வேஷிகிங்கரः = திருமங்கையாழ்வாருடைய கிங்கரர் என்றபடி. நம்பிள்ளையருளிச் செய்ததாகக் கொள்ளுமளவில் திருக்கலிகன்றிதாஸர் என்கிற அவருடைய திருநாமம் பொறிக்கப்பட்டதாகிறது. இந்த வியாக்கியானத்தில் "ப்ராயः ப்ரபதநே பும்ஸாம் பௌநः புந்யம் நிவாரயந், ஹஸ்தः ஸ்ரீரங்கபர்த்துர் மாம் அவ்யாத் அபயமுத்ரிதः." என்கிற தேசிகனுடைய சுலோகம் பூர்த்தியாக உதாஹரிக்கப்பட்டுக்காண்கிறது. இது ஸர்வாத்மநா அஸம்பாவிதமென்பதை யாவரும் இசையவேண்டும். இதேபோலத்தான் அநுவும் ஏடுகளை வைத்துக்கொண்டு காலக்ஷேபம் செய்கிறபோது ப்ரவக்தாக்கள் ஸம்வாத ப்ரமாணமாகச் சொல்லுவதை ச்ரோதாக்கள் ஏட்டில் ஒரு மூலையில் எழுதிவைத்துக்கொள்வதுண்டு; அதுவும் க்ரந்தத்தில் சேர்ந்ததென்று மருண்டு சேர்த்தே அச்சிட்டுவிடுவர்கள். தமிழ்த் தெய்வமான மஹாமஹோபாத்யாய. சாமிநாதையரவர்கள் இத்தகைய ஆராய்ச்சிகள் பலவற்றையும் வெளியிட்டுள்ளார். அவர் ஓலையேடுகளிலேயே பெரும் பாலும் காலங்கழித்தவராகையாலே பல மருமங்களைக்கண்டுபிடித்துள்ளார். அவருடைய ஆராய்ச்சிகள் உலகம் மெச்சநிற்பன. ப்ரக்ருதத்தில் நாம் காட்டும் மருமம்போன்ற பல மருமங்களை அவர் விளக்கியுள்ளார். தேசிகோக்தியைப் பிள்ளைலோகாசாரியர் உதாஹரித்துள்ளாரென்பதோடு ஸ்ரீபாஷ்யகாரரும் ஆளவந்தாரும் உதாஹரித்துள்ளார்க ளென்பதோடு ஒருவாசியில்லை யென்றொழிக. இனி விஷயசோதனங்களிற்புகுவோம்.

## ஸ்ரீவிபுத்வவிசாரத்தில் சிறந்ததெளிவுபிறப்பிக்கத்தொடங்குதல்

47. ஸுதாசுவடியில் "இரண்டாமதிகாரம்-லக்ஷ்மீவிபுத்வஸ்தாபனம்" என்று மகுட மிட்டுத் தலைகாலில்லாமல் நிரர்த்தகசப்தராசிகளை, நிரப்பியுள்ளார். பூருவாசாரியர்கள் இந்த விபுத்வவிசாரத்தில் இறங்கினவர்களேயல்லர். நவீனர்கள் இதில் கிளர்ச்சியைக் கிளப்பிக் குழப்பிவைத்தார்கள். தத்வஜிஜ்ஞாஸுக்களுக்குப் பரமத்ருப்திகரமாகத் தெரிவிப்போம்.

## பிராட்டிதிறத்தில் மூன்று வகையான விவாதங்கள் விளைந்தமை விளக்குதல்

48. (1) பிராட்டியும் எம்பெருமானைப்போலே உபாய பூதை; (அதாவது) முக்தியளிப்பதில் எம்பெருமானுக்குப்போலே பிராட்டிக்கும் ஸ்வதந்த்ராதிகாரமுண்டு; (2) பிராட்டிக்கு விபுத்வ முண்டு. (அதாவது) எம்பெருமான் ஸ்வரூபம் எப்படி விபுவோ அப்படியே பிராட்டியின் ஸ்வரூபமும் விபு. (3)பிராட்டிக்கும் ஜகத்காரணத்வமுண்டு—என்பதான மூன்று அம்சங்களை நவீநர் கூறுகின்றார்கள். பூர்வாசார்யஸித்தாந்தத்தில் (1) பிராட்டிக்குப் புருஷகாரத்வ மாத்திரமேயுள்ளது, உபாயத்வமில்லையென்றும்; (2) ஜீவநிர் விசேஷமாக அணுத்வமேயுள்ளது, விபுத்வமில்லையென்றும், (3) ஜகத்ஸ்ருஷ்டியில் பிராட்டி ஸாக்ஷிபூதையே யல்லது ஸாக்ஷாத் ஜகத்காரணத்வம் இவளுக்கு இல்லையென்றும் அருளிச்செய்யப்படுகிறது. கீழே விவரித்தபடி பிறர் கூறுகின்ற மூன்று அம்சங்களும் பிராட்டியின் பெருமையைப் பேசுவனவாதலால் அப்படிப்பட்ட பெருமைகள் அவளுக்கு இல்லையென்று கூற நாம் முன்வரவேண்டிய அவசியமில்லை. பண்டை நாளாலே நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளுங் கொண்டு* என்று ஆழ்வா ரருளிச்செய்தபடியே பகவத் கடாக்ஷ லக்ஷ்மீகடாக்ஷங்களைச் சேமநிதி யாகக்கொண்டு "தைவதம் தம்பதீந:*" என்று தேசிகனருளிச் செய்தபடியே திவ்ய தம்பதிகளிருவரையும் தைவமாகக்

கொண்டிருக்கிற நாம் 'பிராட்டிக்கு உபாயத்வமில்லை விபுத்வமில்லை காரணத்வ மில்லை' என்று சொல்லப் புறப்படுவது எதற்கு? வஸ்துதஃ அவை இல்லாமலிருந்தாலும் உண்டென்று பிறர் சொன்னால் வைபவவாதமே பண்ணிப்போரவேண்டிய பக்தர்களுக்கு அதைக்கண்டித்து ஆகவேண்டியது ஒன்றுமில்லையே' அப்படியே சொல்லிக்கொள்கவென்று இருந்தால் ஹாநியொன்றுமில்லையேயென்று சிலர்க்குத் தோன்றக்கூடும். சாஸ்த்ரார்த்த நிஷ்கர்ஷம் என்கிற துறையில் உள்ளபடி தத்துவத்தை விளக்கவேண்டுவது விவேகிகளினுடைய கடமையாகும்.

பட்டர் ஸ்ரீகுணரத்நகோசத்திலே *ச்ரியம் த்வத்தோபி உச்சைர் வயமிஹ பணும:* என்று பெருமாளைக்காட்டிலும் பிராட்டியை உயர்த்திக் கூறப்போவதாக ப்ரதிஜ்ஞை பண்ணியே தோத்திரம் செய்ய இழிந்தார்; அப்படியே *தவஸ்பர்சாதீசம் ஸ்ப்ருசதி கமலே மங்களபதம்*இத்யாதி ச்லோகங்களால் உயர்த்தியே கூறினர். அவற்றால் சாஸ்த்ரார்த்த க்ஷேபமொன்று மில்லை. தேசிகன் கோதாஸ்துதியில் அற்புதமாகவொரு ச்லோகமருளிச் செய்கிறார். *ரங்கேச்வரஸ்ய தவச* இத்யாதி. (21-ச்லோ). இதில் *வாசாலயந்தி வஸுதே! ரஸிகாஸ் த்ரிலோகீம் ந்யூநாதிகத்வ ஸமதா விஷயைர் விவாதைஃ* என்ற உத்தரார்த்தத்திலுறையும் தாற்பரியம் இன்சுவைமிக்கது. ஆண்டாளுக்கும் ரங்கமன்னர்க்கும் மாலை மாற்றல் நடைபெறும் போது ரஸிகர்கள் குழாம்கூடி மூவகையான வாதங்களைச் செய்து கோஷிக்கின்றார் களாம். பெருமாளைத் தாழ்த்தி ஆண்டாளை உயர்த்திப் பேசுவாரும், ஆண்டாளைத் தாழ்த்திப் பெருமாளை உயர்த்திப் பேசுவாரும், இருவரும் ஏற்றத்தாழ்வு இன்றியே ஸமமாகவே விளங்குகின்றனரென்று பேசுவாருமாய் இங்ஙனே பேச்சுக்கள் அதிகரித்துப் பேரொலியுண்டாயிற்றென்கிறார். எம்பெருமானுக்கு சேஷித்வமும் பிராட்டிக்கு சேஷத்வமும், அப்படியே எம்பெருமானுக்கு ஸகலஜகத்பதித்வப்ரயுக்தமான ஏற்றமும் பிராட்டிக்குப் பத்நீத்வப்ரயுக்தமான தாழ்வும் அபலபிக்கவொண்ணாதவை. ஆகவிப்படி சாஸ்த்ரீயமான ஏற்றத்தாழ்வு இருக்கச் செய்தேயும், ஒரு அபிமாந விசேஷத்தினால் ''ஜ்ஞாநீது ஆத்மைவ மே மதம்'' என்று எம்பெருமானும் சொல்லிவைத்தகணக்கிலே பிராட்டியைஉயர்த்தியும் எம்பெருமானைத்தாழ்த்தியும், இருவரையும் ஸமதுலையிலே வைத்தும் ரஸிகர்கள் பேசுவதாக அருளினர் தேசிகன்.

## *பஞ்சஸ் வேதேஷு பக்ஷேஷு என்கிற அநிர்ணயோக்திப்ரதர்சனம்

49. நம் ஆசாரியர்கள் பிராட்டியினிடம் பகை கொண்டவர்களல்லர். அவளுடைய வைபவத்தைக் குறைத்துப்பேச நினைத்தாரொருவருமிலர். அதீந்த்ரியமான விஷயங்களில் சாஸ்த்ரஸித்தமான அர்த்தங்களையே பேணக் கடமைப்பட்டிருக்கிறோம். மோக்ஷ ப்ரதத்வமோ விபுத்வமோ ஜகத்காரணத்வமோ இவை லக்ஷ்மீ விசிஷ்டனான எம்பெருமானுக்கேயல்லது லக்ஷ்மிக்குத் தனியாக இல்லையென்பதே சாஸ்த்ர ஸம்ப்ரதிபந்நமான ஸத்ஸம்ப்ரதாயம். தேசிகன் திருவுள்ளமும் பெரும்பாலுமிதுவேயாகும். அவர் சதுச்ச்லோகீபாஷ்யத்தில் பல பக்ஷங்களை உபக்ஷேபித்துக்கொண்டுபோந்து *பஞ்சஸ்வேதேஷு பக்ஷேஷு கச்சிதேக: ப்ரமாணவாந்* என்று நிர்ப்பரமின்றிக்கே தலைக்கட்டினர். அதாவது, ''இந்த ஐந்து பக்ஷங்களுள் ஏதாவது ஒரு பக்ஷமே ப்ராமாணிகம்'' என்றார். அவ்வளவோடு நில்லாமல் உத்தரார்த்தம் பணித்தபடி காண்மின்— *ஸபத்நீகஸ்ய ஸாம்ராஜ்யம் ஸர்வதா ஸுப்ரதிஷ்டிதம்* என்றார். அதாவது, எம்பெருமானுக்குச் சொல்லப்படும் உயர்த்திகளெல்லாம் தனிமைப்பட்ட அவனுக்கல்ல, பிராட்டியோடு கூடியிருந்துள்ளவனுக்கே என்றபடி. ஆகவே மோக்ஷப்ரதத்வாதிகளைப் பிராட்டிக்குத் தனியாக ஸாதிப்பதில் தேசிகனுக்கும் திருவுள்ளமில்லையென்பது விளங்கிற்று.

## எம்பெருமானுடைய விபுத்வத்தை உபபாதித்தல்

50. உபநிஷத்து ஓதியுள்ளபடியே போக்தா வென்றும் போக்யமென்றும் ப்ரேரிதாவென்றும் கூறப்படுகிற சிதசிதீச்வர தத்வத்ரயாத்மகமாகவுள்ளது ப்ரபஞ்சம். இந்த மூன்று கோடியிற் சேராமல் பஹிர்ப்பூதமா யிருப்பதொரு வஸ்து கிடையாது. ப்ரக்ருதிமஹான்களுக்கு போக்ய கோடியில் அந்தர்ப்பாவமும், பத்த முக்த நித்யரூபேண மூவகைப்பட்டசேதநர்களுக்கு போக்த்ருகோடியில்அந்தர்ப்பாவமும் ஸர்வஸம்ப்ரதிபந்நம். *க்ஷராத்மாநாவீசதே தேவ ஏக:* என்று ஓதியிருக்கையாலே சேதநாசேதநநியாமகனுயிருக்குமவன் ஒருவனே. அவனே விஷ்ணுசப்தவாச்யனுன ஸர்வேச்வரன்; *சாஸ்தா விஷ்ணுரசேஷஸ்ய ஜகதோ யோ ஹ்ருதி ஸ்தித:, தம் ருதே பரமாத்மாநம் தாத! க: கேந சாஸ்யதே.* என்பது முதலான பிரமாணங்களும் இங்கு அநுஸந்தேயம். அப்பெருமான் தானே சராசரங்களெல்லாவற்றிலும் உள்ளே புகுந்து வியாபித்திருக்கின்றுனென்பதும் ச்ருதி ஸித்தம். *அந்தர் பஹிச் ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ் ஸ்தித:* *அந்த: ப்ரவிஷ்டச் சாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா* இத்யாதி. இந்த வ்யாப்தியானது குணத்தாலே யன்று, ஸ்வரூபத்தாலே யென்று அறியக்கடவது. *நித்யம் விபும் ஸர்வகதம் ஸுஸூக்ஷ்மம்* என்பது முதலான பிரமாணங்கள் ஸர்வகதனுன ஸர்வேச்வரனுக்குப் பரமமஹத்பரிமாண ரூபமான விபுத்வத்தைத் தெரிவிக்கின்றன.

## ஜீவாத்மாவின் அணுத்வத்தை உபபாதித்தல்

51. இப்படிப்பட்ட விபுத்வமானது போக்த்ரு வர்க்கத்தில் ஸம்பவிக்கக் கூடியதன்று, ப்ரஹ்ம ஸூத்ரத்தில் *உத்க்ராந்திகத்யாகதீநாம்* என்று சித்வஸ்துக்களுக்கு அணுத்வஸ்தாபகமான ஸூத்ரம் ப்ரஸித்தம். பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த தத்வத்ரயத்தில் முதற்பிரகரணத்தில் ''ஹ்ருதய ப்ரதேசத்தில் நின்றும் உத்க்ரமித்துப்போவது வருவதாமென்று சாஸ்த்ரம் சொல்லுகையாலே ஆத்மா அணுவாகக்கடவது. அணுவாய் ஹ்ருதயத்திலே நிற்குமாகில் சரீரமெங்கு மொக்க ஸுகதுக்கங்களை புஜிக்கிறபடி யென்னென்னில்; மணித்யுமணி தீபாதிகள் ஓரிடத்திலே யிருக்க ப்ரபை எங்குமொக்க வியாபிக்குமாபோலே ஜ்ஞானம் எங்குமொக்க வியாபிக்கையாலே அவற்றை புஜிக்கத் தட்டில்லை" என்கிற சூர்ணைகளை வியாக்கியானத்துடன் ஸேவித்தால் மேலே யெடுத்துக்காட்டின ப்ரஹ்மஸூத்ரத்தின் பொருள் நெஞ்சில் நன்கு பதியும். ஜீவகோடியில் சேர்ந்தவளான ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கும் அணு ஸ்வரூபத்வமே ஸூத்ரகார ஸம்மதமென்று தேறிற்றுயிற்று.

## பிராட்டி எந்தகோடியிற் சேர்ந்தவளென்பதை விமர்சித்தல்

52. பிராட்டி ஜீவகோடியிற் சேர்ந்தவளல்லள் என்பது பிறருடைய கொள்கை. அவர்களைக் கேட்கிறோம்; இவள் போக்ய கோடியில் சேர்ந்தவளா? ஈச்வர கோடியில் சேர்ந்தவளா? கோடி த்வயத்திலும் அகப்படாதவளா என்று. சைதந்யமுடையவளான பிராட்டியை போக்ய கோடியில் சேர்ப்பதற்கில்லை. ஈச்வரத்வம் இரண்டு வ்யக்தியில் இருக்க வொண்ணுமையாலே ஈச்வர கோடியிலும் சேர்ப்பதற்கில்லை. *ஈசதே தேவ ஏக:* என்றே ச்ருதியும் ஓதிற்று.

## பிராட்டியும் எம்பெருமானும் ஏகவ்யக்தியா? தனித்தனிவ்யக்தியா?

53. எம்பெருமானை வேறு வ்யக்தியாகவும் பிராட்டியை வேறு வ்யக்தியாகவும் இசையக்கூடாதென்றும், இருவரையும் ஏக வ்யக்தியாகவே கொள்ளவேணுமென்றும் பிறர் சொல்லுவது பொருந்தாது, *விஷ்ணுபத்நீம்* என்றும் *ஹ்ரீச் ச தே லக்ஷ்மீச் ச பத்ந்யௌ* என்றுமுள்ள ச்ருதிகளோடு விரோதிக்கு மாகையாலே, *அர்த்தோ வா ஏஷ ஆத்மநோ யத் பத்நீ* என்கிற ச்ருதியைக்கொண்டு இப்படி சொல்லலாகாதோ வென்னில்; அந்த ச்ருதியின் தாற்பரியம் அதுவன்று; தம்பதிகள் இருவருங் கூடியே தர்மா

நுஷ்டாநம் செய்ய வேணுமென்றும் அப்படி யிருவரும் ஒன்று கூடாதொழியில் பய னில்லை யென்றும் தெரிவிப்பதே அந்த ச்ருதியின் தாற்பரியமேன்பது ஸர்வஸம்ப்ரதி பன்னம். இங்ஙனன்றாகில் அந்த ச்ருதியைக்கொண்டு உலகிலுள்ள தம்பதிகளையெல் லாம் ஏக வ்யக்தியே யென்ன வேண்டிவரும். ஸுக துக்காதி வ்யவஸ்தையும் வ்யாஹ தமாகும். அந்த வ்யவஸ்தையேயன்றோ ஆத்மபேதத்தை அறுதியிட்டுத் தருகின்ற பிரமாணங்களில் தலைமை பெற்றிருப்பது.

### திவ்யதம்பதிகளின் ஐக்யவ்யபதேசத்தின் தத்துவ முணர்த்தல்

54. எம்பெருமானுக்கும் பிராட்டிக்கும் ஐக்யவ்யபதேசம் சில விடங்களிற் காண ப்பட்டாலும் அது அவிநாபாவதாத்பர்யகமே யென்று தேசிகாதிகள் நிஷ்கர்ஷித்து ள்ளார்கள். ஏவஞ்ச, பிராட்டிக்கு ஜீவகோடியில் அந்தர்ப்பாவமே ப்ரமாண சரணர் களுக்கு அங்கீகார்ய மென்றதாயிற்று.

### நியாயஸித்தாஞ்ஜனவியாக்கியான ப்ரதர்சனம்

55. தேசிகன் திருவுள்ளமும் இதுவே யென்பதை நன்கு காணலாம். ந்யாய ஸித்தாஞ்ஜநத்தில் ஜீவபரிச்சேதத்தின் தொடக்கத்தில்—*அத ஜீவஃ; அல்பபரிமாணத் வே ஸதி ஜ்ஞாத்ருத்வம். சேஷத்வே ஸதி ஜ்ஞாத்ருத்வம் இத்யாதி தல்லக்ஷணம்* என்று அருளிச் செய்யப்பட்டுள்ளது. ஜீவாத்மாவுக்குச் சொன்ன இந்த லக்ஷணமானது பிராட்டி யிடத்திலும் ஸமந்வயமடைகின்ற தென்பதில் ஐயமில்லை. இவ்விடத்தில் வ்யாக் கியாந கர்த்தாவான ரங்கராமாநுஜ ஸ்வாமி இந்த ஜீவலக்ஷணத்திற்குப் பிராட்டி யை லக்ஷ்யமாகாதபடி செய்துவிடலாமென்று சிறிது பாடுபட்டு அதில் தாமே அத்ருப்தராய்*லக்ஷ்ம்யா ஜீவாந்தர்ப்பாவ பக்ஷேது ந தோஷஃ* [பிராட்டியை ஜீவகோடியில் சேர்ந்தவளாகக் கொள்ளுமளவில் விரோதமே யில்லை] என்றுநிகமநம் செய்தார். பிராட்டிக்கு ஜீவகோட்யந்தர்ப்பாவ பக்ஷம் ஹேயமாகில் அந்த மஹாசார்யர் “லக்ஷ்ம்யாஃ ஜீவாந்தர்ப்பாவபக்ஷே து ந தோஷஃ” என்றெழுத நெஞ்சிலும் நினையாரன்றோ. *ப்ரஹ்மணோ நிர்க்குணத்வபக்ஷே து ந தோஷஃ*ப்ரதாநஸ்யகாரணத்வபக்ஷே து ந தோஷஃ* என்றாற் போன்ற வசந வ்யக்திகள் எங்கேனும் கண்டதுண்டோ?“ஸகல பூர்வாசார்ய ஸித்தா ந்தம் பிராட்டிக்கு ஜீவகோட்யந்தர்ப் பாவபக்ஷமே யாம்” என்கிற கௌரவப்ரதி பத்தியினாலன்றோ அந்த முநிவரர் அங்ஙனமெழுதிற்று. தேசிக திவ்ய ஸூக்திக்கு ஊயாக்கியான மெழுதுமளவில் அவர் அங்ஙனே யெழுதுகையாலே தேசிகனுக்கும் அபிமதமான பக்ஷமிது என்று காட்டினவருமாகிறார்.

### *யதா ஸர்வகதோ விஷ்ணுஸ் ததைவேயம்மென்றதன் விமர்சனம்

56. ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் முதல் அம்சத்தில் எட்டாவது அத்யாயத்தில் *யதா ஸர்வகதோ விஷ்ணுஸ் ததைவேயம் த்விஜோத்தம* என்றிருப்பதைக் கொண்டு பிறர் ப்ரத்யவஸ்தானம் பண்ணுவதொன்றுண்டு. எம்பெருமான் எப்படி ஸர்வகதனோ அப்படியே பிராட்டியும், என்று இந்தப்ரமாணத்தில் சொல்லி யிருப்பதாக விளங்கு கையாலே எம்பெருமானுக்குப் போலே பிராட்டிக்கும் விபுத்வம் கொள்வது ப்ரா மாணிகந்தானே யென்னில்; கேண்மின். அந்த ச்லோகம் எந்த ப்ரகரணத்தி லுள்ளது? எதற்காக அவதரித்தது? என்பதை முன்பின் பார்த்துத் தெரிந்துகொண் டால் கலங்க விரகில்லை. அதை நன்கு விளக்குகிறோமிங்கு.

### ப்ரக்ருதே ஸ்ரீவிஷ்ணுபுராண தாத்பர்ய விவரணம்.

57. மைத்ரேயருக்கு உபதேசம் செய்து வருகின்ற பராசரர் *தேவௌ தாத்ருவிதா தாரௌ ப்ருகோஃ க்க்யாதிரஸூயத, ச்ரியஞ்ச தேவதேவஸ்ய பத்நீ நாராயணஸ்ய யா* என்று ப்ருகு பத்நியான கியாதி யென்பவள் தாதா விதாதா என்னுமிரண்டு தேவதைகளையும்

நாராயண பத்நியான லக்ஷ்மியையும் பெற்றதாகக் கூறினர். அதுகேட்ட மைத்ரேயர் *க்ஷீரோதாத் ஸ்ரீஸ் ஸமுத்பூதா ச்ரூயதே அம்ருதமந்தநே, ப்ருகோ: க்க்யாத்யாம் ஸமுத்பந்நேத்யே ததாஹ கதம் பவாந்* என்று கேள்வி கேட்டார். நித்யையான லக்ஷ்மிக்கு உத்பத்தி சொல்லுவது எங்ஙனே கூடுமென்று கேள்வியின் ஸாராம்சம். இதற்கு விடையிறுக்கிருர் பராசரர் *நித்யைவைஷா ஜகந்மாதா விஷ்ணோ: ஸ்ரீரநபாயிநீ, யதா ஸர்வகதோ விஷ்ணுஸ் ததைவேயம் த்விஜோத்தம!* என்று. விஷ்ணு நித்யனுயிருக்கச் செய்தேயும் அவனுக்கு ஐச்சிகமான உத்பத்திகூடுகிறுப்போலே பிராட்டிக்கும் கூடுமென்று ஸமாதாநஸாரம்.

## —*விஷ்ணோ: ஸ்ரீரநபாயிநீ* என்றதன் விவரணம்—

58. நித்யனுய் நிகிலஜகஜ்ஜநகனுய் நித்யஸித்த லக்ஷ்மீ ஸம்பந்த சாலியாயிருக்கின்ற எம்பெருமான் ஸர்வ ஜகத்ரக்ஷணுர்த்தமாக ஸர்வ தேசங்களிலும் ஸர்வ ஜாதிகளிலும் அவ்வோவிக்ரஹ விசேஷ விசிஷ்டனுய்க் கொண்டு ஸந்நிஹிதனுகிருப்போலே, பிராட்டியும் நித்யையாய் நிகிலஜகஜ்ஜநநியாய் நித்யஸித்த பகவத்ஸம்பந்த சாலிநியாயிருக்கச் செய்தேயும் நித்யாநபாயிநீம் என்று சொன்ன நிரபாயத்வத்தை ரக்ஷித்துக் கொள்வதற்காக அப்பெருமானுக்கேற்ற விக்ரஹ விசேஷங்களோடே ஸர்வத்ர ஸந்நிஹிதையாகின்ருளென்றதாயிற்று. நிரபாயத்வமென்பது விச்லேஷாஸஹத்வமாத்ரமேயன்று; நியததத்ஸாஹசர்யமும் அதுவாகையாலே பிராட்டியின் இந்த ஸந்நிதியானது நிரபாயத்வ ரக்ஷணுர்த்தமே யாகின்றது.

## —பிராட்டிக்கு விக்ரஹவ்யாப்தியேயொழிய ஸ்வரூபவ்யாப்தியில்லை—

59. இதற்குமேல் *அர்த்தோ விஷ்ணுரியம் வாணீ* என்று தொடங்கி *ரதீ ராகச்ச தர்மச்ச லக்ஷ்மீர் கோவிந்த ஏவச* என்னுமளவான பதினறு ச்லோகங்களாலே திவ்ய தம்பதிகளின் விக்ரஹவ்யாப்தியின் ப்ரகாரத்தை நன்கு உபபாதித்திருக்கையாலே விக்ரஹவ்யாப்தியே ஸர்வகதசப்தார்த்தமாயிருக்கத் தகுதியுடைத்து. ஸ்வரூப வ்யாப்தி விவக்ஷிதமாகில் *தேவதிர்யங்மநுஷ்யேஷு புந்நாமா பகவாந் ஹரி:, ஸ்த்ரீநாம்நீ லக்ஷ்மீர் மைத்ரேய! நாநயோர் வித்யதே பரம்.* என்றது பொருந்தாதே.

## —விக்ரஹவ்யாப்தியை நிரூபித்து முடித்தல்—

60. அடுத்த ஒன்பதாமத்யாயத்திலும் *ஏவம் யதா ஜகத்ஸ்வாமீ தேவதேவோ ஜநார்தந:, அவதாரம் கரோத்யேஷா ததா ஸ்ரீஸ் தத்ஸஹாயிநீ; புநச்ச பத்மா ஸம்பூதா ஹ்யாதித்யோபூத் யதா ஹரி:. யதாச பார்க்கவோ ராமஸ் ததாபூத் தரணீ த்வியம். ராகவத்வே அபவத் ஸீதா ருக்மிணீ க்ருஷ்ண ஜந்மநி. அந்யேஷு சாவதாரேஷு விஷ்ணோரேஷாநபாயிநீ; தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ, விஷ்ணோர் தேஹாநுரூபாம் வை கரோத்யேஷா ஆத்மநஸ் தநூம்* என்கிற ச்லோகங்களாலும் ப்ரச்நோத்தர வாக்யத்தின் முதலிலுள்ள ஸர்வகதத்வோக்தியானது நன்குவியாக்கியானம் செய்யப்பட்டதாயிற்று. *த்வயா ச விஷ்ணுநா சாம்ப! ஜகத்-வ்யாப்தம் சராசரம்* என்ற வசனமும் இப்புடையிலேதானே நன்கு பொருந்துகின்றதாயிற்று. அந்த ப்ரகரணத்திலேயே யன்றோ *ஸௌம்யாஸௌம்யைர் ஜகத்ரூபைஸ் த்வயைதத் தேவி பூரிதம்* என்றும் ஸ்பஷ்டமாகச் சொல்லியுள்ளது. *அநுஜநுரநுரூபரூபசேஷ்டா**யதி மநூஜதிரச்சாம்* என்கிற பட்டர் ஸ்ரீ ஸூக்திகளும் இங்கே பொருந்த அனுஸந்தேயம். ஆகவே ஜீவகோடியில் சேர்ந்தவளான பிராட்டி அணுஸ்வரூபையேயல்லது விபுஸ்வரூபையல்லளென்றும். வ்யாப்தி சொன்னவிடம் விக்ரஹ வ்யாப்தி பரமேயன்றி ஸ்வரூபவ்யாப்பரமன்றென்றும் நிகமித்ததாயிற்று.

—*பஞ்சஸ்வேதேஷு பக்ஷேஷுவின் ப்ரஸ்தாவம்—

*61.* வேதாந்தவாசிரியர் சதுச்ச்லோகீ பாஷ்யத்தில் ஐந்து பக்ஷங்களைக் காட்டி அவற்றுள் இன்னபக்ஷமே உரியதென்று விளக்கிச்காட்டாமல் *பஞ்சஸ்வேதேஷு பக்ஷேஷு கச்சிதேகঃ ப்ரமாணவாந்* [ஏதோவொரு பக்ஷம் ப்ராமாணிகம்] என்று முடித்திட்டார். ஐந்து வ்யக்திகளைக் கூறி 'இவர்களில் எவன் யோக்யன்?' என்று கேட்க 'எவனேனுமொருவன் யோக்யன்' என்றால் என்னத்ருப்தியாகும்? இங்கு அந்தகர் எழுதுகிறார்—''நடாதூர் அம்மாள் அருளிய ப்ரபந்நபாரிஜாதத்தில் தேசிகஸித்தாந்தத்தைத் தெளிவாகக் காணலாம்''என்று. ப்ரக்ருதவிஷயத்தில் தேசிகஸித்தாந்தமென்பதொன்று இல்லையாயிருக்க, அதைக் காணவேண்டுமிடமொன்று காட்டுவது மிகவிசித்திரம். ககநாரவிந்த ஸௌரபத்தை மரீசிகாம்பஸ்ஸில் நன்கு காணலா மென்பதோடொக்குமிது. ப்ரபந்நபாரிஜாத மென்பது மிக அர்வாசீநரான வரதாசாரியரென்பாரொருவர் எழுதியதேயன்றி அது நடாதூரம்மாளுடைய க்ருதியன்று. தேசிகன் தமது நூல்களில் எத்தனையோ க்ரந்தங்களை யுதாஹரிப்பவர் ப்ரபந்நபாரிஜாதத்தை ஒரு மூலையிலாவதுதொட்டிருப்பதுண்டோ?

—ப்ரபந்நபாரிஜாதம் அர்வாசீநமென்று நிரூபித்தல்.—

62. வேதாந்த வாசிரியர் ப்ரபந்ந பாரிஜாதத்தைத் தொட்டதே கிடையாதென்பது தவிர, மற்றுங்கேளீர்; ''முன்னவராம் நங்குரவர்மொழிக ளுள்ளப் பெற்றோம் முழுதுநமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம்'' என்றருளிச்செய்த மணவாளமாமுனிகள் தாம் கண்ட பூர்வாசார்யக்ரந்தங்களிலிருந்து விசேஷமாக மேற்கோள்கள் காட்டியருளுகிறார். நடாதூரம்மாளுடைய தத்வஸாரத்தையெடுக்கிறார்; ப்ரபந்நபாரிஜாதமென்று ஒன்று இருப்பாதகவே காட்டியருளவில்லை. வாதிகேஸரி அழகியமணவாளச்சீயரும் பல பூர்வக்ரந்தங்களை யுதாஹரிக்கிறார்; அவரும் இதையெடுத்திலர். பரகால நல்லான் ரஹஸ்யத்திலும் பலக்ரந்தங்களின் உபாதானமுள்ளது; அதிலுமிதுகிடையாது. ஆகவே ஸர்வாத்மநா அப்ரஸித்தமான இதனை அச்சேறியுள்ளதென்பதேகொண்டு ப்ராமாணிகமாக்கப்புகுவது தகுதியற்றதேயாம். அதிலுள்ள விஷயத்தை அந்தகர் உள்ளபடி க்ரஹித்திருக்கிறாரா என்கிற விசாரம் வேறு; க்ரந்தமே அர்வாசீநமென்னும்போது அதினுட்புக்கு விமர்சம் வேண்டாவே. வேங்கடாத்வரி பணித்த லக்ஷ்மீஸஹஸ்ரத்தின் வியாக்கியானத்தில் ''பிராட்டியின்விபுத்வத்தைக்கண்டித்து அணுத்வத்தைஸ்தாபித்தவர்கள் பட்டர் முதலான ஆசாரியர்கள்'' என்றெழுதி யிருப்பதைப் பலகால் எடுத்துக் காட்டியிருக்கிறோம். தேசிகன் மதித்த ஆசாரியர்களில் தலைவர் பட்டர். அவருடையதிருவுள்ளத்திற்குப் பாங்கல்லாதமதத்தைப் பேண விரும்பும் அந்தகர்போல்வார் தேசிகபக்தர்களாகார் என்று இவ்விசாரத்தைத் தலைக்கட்டிநிற்கிறோம்.- .... .... *

ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யத்தில் லக்ஷ்மீவிபுத்வ சோதன மென்னும்

இரண்டாவது ஆஹ்னிகம் முற்றிற்று.

*பரமபுருஷவ்யாப்திவிசார பரமான மூன்றாவது ஆஹ்னிகம்*

—தத்வ நிஷ்கர்ஷங்களில் ராஜமார்க்கங் காட்டுதல்—

**63.** பரம புருஷனொருவனுளனென்பதையும் அவனுடைய ஸ்வரூப ரூபகுணாதிகள் இப்படிப்பட்டவை யென்பதையும் நாம் சாஸ்த்ரங்களைக் கொண்டு அறிகிறோமே யல்லது வேறு எதனாலும் அறிகின்றிலோம். அதீந்த்ரியமான விஷயங்களில் நமக்கு சாஸ்த்ரமே கைவிளக்கு. அல்பஜ்ஞர்களான நாம் சாஸ்த்ரங்களில் நேராக இறங்கித்

தத்துவங்களையும் மருமங்களையும் உணர உரிமையுடையோமல்லோம். *சாஸ்த்ரஜ்ஞாநம் பஹுக்லேசம் புத்தேச் சலநகாரணம், உபதேசாத் ஹரிம் புத்த்வா* என்று சாஸ்த்ரமே காட்டின கட்டளையிலே, தத்வதர்சிகளான மஹாப்ராஜ்ஞர்கள், வெண்ணெய் கடைந்து திரட்டியெடுத்துக் கொடுக்குமாபோலே லலிதமாக எடுத்துரைத்து வைக்க, அது கொண்டு உணரவே நாம் அதிகாரிகள். எதிலும் எங்கும் ஸம்ப்ரதாய பேதமென்று ஒன்று தோன்றியிருப்பதனுல் இன்ன ஸம்ப்ரதாயஸ்தர் இன்ன ஆசார்யருடைய ஸ்ரீ ஸூக்திகளையே நிதியாகக் கொள்வதென்றும் அவற்றையே போஷித்துப் பேசுவதென்றும் ஒருபத்ததி இருப்பதனுல் அவரவர்கள் தம் தம் ஆசார்யருடைய ஸ்ரீஸூக்திகளில் வைத்திருக்கிற நம்பிக்கையினுல் ஸ்வமதத்தையே வலிதாக வெளியிட்டுக் கொண்டு காலங்கழிக்கிறுர்கள். இந்த மருமத்தை யாரோ சில மஹா மேதாவிகளே கண்டு 'இப்படிபக்ஷபாதிகளாய்ப் பேசியும் எழுதியும் போருகிறவர்களின் வார்த்தைகளில் நாம்செவி கொடுக்கவோ கண் செலுத்தவோ தகாது; மத்யஸ்தர்களான ஆசாரியர்களின்திருவாக்குகளைக் கொண்டே தத்துவத்தை உணரவேணும்' என்று துணிந்து விவாதிகளான இரண்டு ஸம்ப்ரதாயஸ்தர்களுக்கும் பொதுவாகவுள்ள ஆசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளையே கொண்டு தத்வநிஷ்கர்ஷம் செய்கிறுர்கள். இதுதான்ராஜமார்க்கம். இதை யாரும்மறுக்ககில்லார்.

## —பொதுவான ஆசாரியர்களைப் பேணவேண்டுதல்—

64. உபய ஸம்ப்ரதாயஸ்தர்களுக்கும் பொதுவாகச் சிலஆசாரியர்கள் உலகமறிய விளங்குகின்றுர்களன்றே.ஸ்ரீபாஷ்யகாரர், கூரத்தாழ்வான், பட்டர், பிள்ளான், ச்ருதப்ரகாசிகாசார்யர் என்னும் மஹாசார்யர்கள் பொதுவானவர்களென்பது நிர்விவாதம், விவாத க்ரஸ்தமான விஷயங்களை மத்யஸ்தத்ருஷ்டியுடன் நிஷ்கர்ஷிக்கவேண்டும்போது மேற்குறித்த மஹாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகள் எப்படியுள்ளன? என்று விமர்சிப்பதே ப்ராமாணிகர்களுக்கு உற்றது அவர்களின் திவ்ய ஸூக்திகளில் ஸ்பஷ்டமாகத் தெரியாத விஷயங்களிருந்தால் அவற்றில் அவரவர்கள் தம் தம் அஸாதாரண] ஆசாரியரின் ஸ்ரீ ஸூக்திகளைக் கொண்டு தெளிவுபெறலாம். பொதுவான ஆசாரியர்களின் திருவாக்குக்களில் ஸ்பஷ்டமாகவும் ஸுஸ்பஷ்டமாகவும் விளங்குகின்ற விஷயங்களிற்கூட ஏகதேசிகளின் அபிப்ராயத்தையே திடமாகக் கொண்டு போராடுவதென்பது விவேகிகளின் பணியாகுமோ? சிலருடைய கொள்கை என்னவெனில், மற்றையாசார்யர்களின் திருவாக்குக்கள் எப்படியாவது இருக்கட்டும்; அவற்றைப்பற்றி நமக்கு விசாரமே வேண்டா; நமக்கென்று வாய்த்த அஸாதாரண ஆசாரியருடைய திருவாக்கில் ஸ்பஷ்டமாக எவ்வண்ணம் வெளிவந்துள்ளதோ அவ்வண்ணமே தான் நாம் கொள்ளவேண்டும்—என்பதாக. இக்கொள்கையைத் தப்பென்று நாம் சொல்லலாகாது. ஸ்வாசார்ய பக்தியின் கனம் விளங்குமிதில். ஆனுல் இத்தகைய கொள்கை ரஹஸ்யமாக ஸ்வக்ருஹத்தினுள்ளே போற்றத் தகுமேயன்றி ஸதஸ்ஸுக்குப் பயன்படாது. விவாதம் விளையாதவளவில்க்ஷேமமே; அது வளர்ந்திட்டால் ஸ்வாசார்ய ஸூக்தியென்கிற அபிமானத்தை வெகு தூரத்தில் விலக்கி வைத்துவிட்டு, பொதுவான ஆசாரியர்களின் ஸ்ரீ ஸூக்திகளை மாத்திரமே தஞ்சமாகக் கொள்ளவேணும். இஃது அனைவரும் உகக்கத்தக்க வார்த்தையேயாம்.

## —பகவானுடைய வியாப்தியில் மதபேதங்கள்—

65 இனி ப்ரக்ருத விஷயத்திற்கு வருவோம். எம்பெருமான் எங்கும் நிறைந்த பரஞ்சோதி யென்று உலகமனைத்தும் உணரும். "கருதரிய உயிர்க்குயிராய்க் கரந்தெங்கும் பரந்துறையும் ஒருதனி நாயக மென்றுல் உன் பெருமைக்கு அளவாமோ"? என்று போற்றுகிறுர்கள் பக்தர்கள். அணுவான பதார்த்தங்களினுள்ளும் பகவான் நிறைந்துளன் என்பது வேதாந்திகளின் கொள்கை. (1) உட்புறம் வெளிப்புறம் என்று

இரண்டிடங்கள் பகுத்து வகுத்துக் காட்டக்கூடிய பொருள்களாயிருந்தால் அவற்றில் உள்ளேயும் உறைந்துளன் என்று ஒப்புக் கொள்ளலாம், அணுபதார்த்தங்களுக்கு இங்ஙனே பகுத்துக் காட்டக்கூடிய நிலைமை இல்லாமையால் அப் பொருள்களில் பக வான் உள்ளேயுளன் என்று ஒப்புக் கொள்ள இயலாது—என்பது ஒரு ஆக்ஷேபம். (2) உள்ளேயுளன் என்று ஒப்புக்கொள்ளக்கூடிய விடத்திலும், பகவான் தன்னுடைய ஸ்வரூபம் எவ்வளவுண்டோ அவ்வளவும் அடங்க வியாபித்துளன் என்று இசையத் தகாது; ஏனென்றால் ஒரு வஸ்துவிலேயே பகவானது ஸ்வரூப மடங்கலும் அடங்கிப் போகுமானால் மற்றும் உலகிலுள்ள அபரிமிதங்களான வஸ்துக்களிலும் அந்த ஸ்வரூ பம் வியாபித்திருக்க வேணுமல்லவா? அதற்கு அவகாசமில்லாமற் போகுமே. ஒரு உதாரன் தனக்குள்ள பொருள்களை யெல்லாம் ஒரு யாசகனுக்கே பூர்த்தியாகக் கொடுத்துவிட்டால் எப்படி? மற்றுள்ள பலயாசகர்களுக்கும் கொடுக்கச் சரக்கு இருக்கவேணுமே; (அது போல) பகவானும் தன் ஸ்வரூபத்தை நிச்சேஷமாக ஒரு வஸ்துவிலேயே நிரப்புகிறானென்றால் இது எப்படி ஸம்பவிக்கும்? மற்ற வஸ்துக் களுக்கு என்ன கதி? ஒவ்வொரு வஸ்துவிலும் நிச்சேஷமாக நிரம்பியுள்ளானென்கை பொருந்தமாட்டாது. ஒன்றில் நிச்சேஷமாக நிரம்பி விட்டால் மற்றொன்றிலிருக்க ப்ரஸக்தியேது? ஆகவே வஸ்துதோறும் பகவத் ஸ்வரூபம் நிச்சேஷமாக நிரம்பியுள்ள தென்று கொள்ளத்தகாது—என்பது மற்றொரு ஆக்ஷேபம். இவ்விரண்டு ஆக்ஷேபங் களும் இன்று நேற்று உதித்தவையல்ல; நெடுநாளாகவேயுண்டு. இவற்றை நமது பூருவாசாரியர்கள் நன்கு கண்டித்துள்ளார்கள். ஸுஸ்பஷ்டமாகக் கண்டித்திருப் பவர் ச்ருதப்ரகாசிகாசார்யர். எங்கே எவ்விதமாகக் கண்டித்திருக்கிறாரென்பது பற்றி மேலே விரிவுக்கஞ்சாமல் விவரிப்போம் அது நிற்க.

## —ஆக்ஷேபகர்களின் பகவச்சக்தி விசேஷவித்வேஷம்.—

66. மேலே விவரித்த இரண்டு ஆக்ஷேபங்களைக் கூசாமல் பேசவல்லவர்கள் யாராயிருக்க வேண்டு மென்பதைச் சிறிது விமர்சிப்போம். பகவானுக்கு ஒப்புயர் வற்ற சக்திவிசேஷ முண்டென்பதைப் பொறுக்ககில்லாதவர்களே இந்தக் கக்ஷி களைக் கிளப்பவேண்டும். பகவான் அத்புத சக்தியுக்தன் என்றும் அகடித கடநாஸ மர்த்தன் என்றும் பிரமாணங்கள் கூறுவதை அஞ்ஜலிபந்தத்துடன் ஏற்க வல்ல ப்ராமாணிக வேதாந்திகள் இப்படிப்பட்ட கக்ஷிகளைக் கிளப்ப ஒருபோதும் நினை யார்கள்.

## —அச்யுதசதகச்லோக விசேஷவிவரணம்—

67. இந்த வ்யாப்தி விஷயத்தை அல்லது ப்ரதிவஸ்து பூர்ணத்வவிஷயத்தை விட்டிட்டு வேறு சில விஷயங்களை யெடுத்துக்கொள்வோம்; ஸகல ப்ரபஞ்சங்க ளுக்கும் பகவானையே காரணபூதனாகக் கொள்ளுகிறோம் உலகில் ஒவ்வொரு கார்ய வஸ்துவுக்கும் மூவகைப்பட்ட காரணங்கள் வேண்டியிருக்கின்றன; 1. உபாதாந காரணம்; 2. ஸஹகாரி காரணம், 3. நிமித்தகாரணம். ப்ரபஞ்ச ஸ்ருஷ்டியில் இம் மூவகைக்காரணமும் பகவானொருவனேயென்று மறைமுடி அறுதியிடுகின் றது. ஒன்றுக்கே மூவகைக் காரணத்வமும் எங்ஙனே பொருந்தும்? உலகில் இப்படியுள்ள ஒரு வஸ்துவையாவது உவமையாக எடுத்துக்காட்ட முடியுமோ? முடியாதே. உலகிற்காண்கிறபடிதானே பகவானிடத்தில் ஸமந்விதமாகவேணும். ஒருவனே மூவகைக்காரணமுமென்று அஸம்பத்தமாக எப்படிச் சொல்லுகிறீ ர்கள்? என்று கேட்டால், பகவான் அத்புதசக்தியுக்தனாகையாலே அப்பரம புருஷனிடத்தில் எதுவும் ஸமந்விதமே; அஸம்பத்தமானது ஒன்றுமில்லை என்கிற விடைதவிர வேறொன்றும் சிறிதும் சொல்லகில்லார் வேதாந்திகள். வேதாந்த தேசிகனும் இதே விடையைத்தான் விடுத்தருளுகிறார்; அச்யுதசதகத்தில்

* புரிஸ பஹாண ஸரீரே* என்றச்லோகத்திற்கு நம்முடைய விரிவான வியாக்கியானம் உலகம் பரவியுள்ளது; வியாக்கியானமே வேண்டா; மூலமே போதும். *வஹஸி ணிமித்தத்தணம் வி அப்புய ஸத்தீ— வஹஸி நிமித்தத்வமபி அத்புதசக்தி:* என்றன்றோ ச்லோக முள்ளது. அத்புத சக்தியோகத்தாலே இவை கூடும்— என்றன்றோ நிர்வஹிக்கப்பட்டுள்ளது. ஸ்ரீபாஷ்யகாராதிகளுக்கும் இந்த அத்புதசக்தியோகமே சாஸ்த்ரார்த்த நிர்வாஹங்களுக்குக் கைகொடுக்கின்றது. ஆகவேதான் "ஸகலவஸ்து விலக்ஷணஸ்ய சாஸ்த்ரைக ஸமதிகம்யஸ்ய அசிந்த்ய-அப்ரமேய-அத்புதசக்தியுக்தஸ்ய பரஸ்ய ப்ரஹ்மண:" என்று அடிக்கடி அருளிச் செய்யப்படுகிறது. மேற்குறித்த வாக்யங்கள் ஸ்ரீபாஷ்ய தீப ஸாராதிகளில் பலபல இடங்களில் காணலாகும்.

—பேதா பேத வாதக்கிளர்ச்சியைப் பற்றி—

68. *பரா அஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே* என்பது முதலான சுடர்மிகு சுருதிவாக்கியங்கள் பலபல. இவற்ருல் பகவானுடைய சக்தி அத்புதமானதென்று நிருபிக்கப்படுகிறது. அப்படிப்பட்ட சக்தி அவனுக்கில்லை யென்று ப்ராமாணிகரொருவரும் வாய்திறவார். இந்த சக்தியை இசைந்தால் விருத்த ஸமுச்சயங்கொள்ளும்பேதா பேதவாதிகளான பாஸ்கராதிகளின் வாதமும் உபபந்நமாக வேண்டிவரும் என்று ஒரு அசட்டுவாதம் கிளம்புகிறது. இதைச் சிறிது விமர்சிப்போம். பேதாபேத வாதிகள் பகவானுடைய அத்புத சக்தியோகத்தை உபஷ்டம்பகமாகக் கொண்டா தங்களுடை வாதத்தைக் கிளப்பியிருக்கிருர்கள்? இல்லையே. ஆகவே இந்த ப்ரதிபந்தி எப்படி விலைச்செல்லும்? அர்த்த மற்ற இப்படிப்பட்ட ஆபாதனங்களினுல் சில அறிவிலிகளை வஞ்சிக்கலாமே யொழிய, விவேகிகளிடம் விலைச் செல்லக்கூடிய வார்த்தையே அன்றிது.

—*நல்குரவுஞ் செல்வும் பதிகத்தினுராய்ச்சி—

69. ஒன்று பாருங்கள்; சுவர்க்கத்தை நரக மென்ன மாட்டோம்; நரகத்தை ஸ்வர்க்கமென்ன மாட்டோம்; ஐச்வரியத்தை தாரித்ரியமென்ன மாட்டோம், தாரித்ரியத்தை ஐச்வர்யமென்ன மாட்டோம். த்வேஷத்தை ஸ்நேஹமென்ன மாட்டோம், ஸ்நேஹத்தை த்வேஷமென்ன மாட்டோம்; விஷத்தை அம்ருதமென்ன மாட்டோம், அம்ருதத்தை விஷமென்ன மாட்டோம்; நிழலை வெய்யிலென்ன மாட்டோம், வெய்யிலை நிழலென்ன மாட்டோம். ஆனுல் நம்மாழ்வார் திருவாய் மொழியில் சேராதவற்றை யெல்லாம் சேர்த்துச் சொல்லி யேத்துகிருர். *நல்குரவுஞ் செல்வும்நரகும் சுவர்க்கமுமாய், வெல்பகையும் நட்பும் விடமுமமுதமுமாய்*கண்டவின்பம் துன்பம் கலக்கங்களும் தேற்றமுமாய்* நகரமும் நாடுகளும் ஞானமும் மூடமுமாய்* *புண்ணியம் பாவம் புணர்ச்சி பிரிவென்றிவையாய்* என்றிப்படி வாய் வந்தபடி யெல்லாம் பேசியுள்ளார். இப்பதிகத்திற்கு நம் தேசிகன் அத்புதமான ச்லோகமிட்டருளுகிருர்:—* ஸம்பத்தாரித்ர்யபாவாத் ...அகடித கடநம் ப்ராஹ க்ருஷ்ணம் சடாரி:* என்றருளியுள்ளார். இங்கே புத்திமான்கள் சால விமர்சிக்க வேண்டியதுண்டு; *நல்குரவுஞ் செல்வுமென்கிற இத்திருவாய் மொழியில்(8)*வன்சரண் சுரர்க்காய் அசுரர்க்கு வெங்கூற்றமுமாய்* என்பதும் ஒரு பாசுரம். பகவான் தைவப்ரக்ருதிகளுக்கு சரண்யனும் ஆஸுரப்ரக்ருதிகளுக்கு ம்ருத்யு வாயுமுளன் என்று இப்பாசுரத்தில் ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டிருக்கிறது. உலகில் ஒரு மனிதன் சிலர்க்கு நல்லனும் சிலர்க்குத் தீயனுமிருப்பதை எங்குங்காணுநின்ருேம். இப்படியிருப்பதற்கு ஒரு அகடிதகடநா சக்தி வேண்டிய அவசியமேயில்லை. இதுபோல பகவானும் நல்லார்க்கு நல்லனுய்த் தீயார்க்குத் தீயனுயிருக்கிருனென்பதில் அகடிதகடகத்வமென்பது சிறிதுமில்லை. சிலரிடத்திலே நல்குரவையும் சிலரிடத்திலே செல்வத்தையும் தருகிருன்; சிலர்க்கு நரக ப்ராப்தியையும் சிலர்க்கு ஸ்வர்க்க ப்ராப்தியையும் பண்ணி வைக்கிருன் என்ருல்

இதில் அஸம்பாவிதத்வசங்கைக்கு உதயமேயில்லையன்றோ. இத்திருவாய்மொழியை இப்புடையிலே நிர்வஹிப்பதில் என்ன அருமை? ஒன்றுமில்லை. எம்பெருமான் இப்படியாகவுள்ளானென்று சொல்லுவதனால் அவனுடைய அகடித கடநாஸாமர்த்தியம் விளங்குகைக்கு ப்ரஸக்தி யேது. சேராதவற்றைச் சேர்ப்பிக்கவல்ல சக்தி பகவானுக்குக் கிடையவே கிடையாதென்பவர்கள் இங்கே இரண்டு விஷயங்களுக்கு விடை கூறவேண்டும். (1) *அகடித கடநம் ப்ராஹ க்ருஷ்ணம் சடாரி:* என்று ஸ்வாமி தேசிகன் ஏன் அருளிச் செய்தார்?, (2)இந்தத் திருவாய்மொழியில் அகடிதகடநா சக்தியைக் கொண்டு கூறவேண்டிய விஷயம் என்ன இருக்கிறது?—வர்ஷசதமானாலும் இவ்விரண்டு கேள்விகளுக்கும் ஆர்ஜவத்துடன் விடையிறுக்க பகவச்சக்தி வித்வேஷிகள் அசக்தரே.

**தேசிகன் பிள்ளானை விட்டு நம்பிள்ளையைத் தஞ்சமாகக் கொண்டதத்துவம்**

70. *நல்குரவும் செல்வுமென்னும் பதிகத்தினால் ஸர்வநியந்த்ருத்வம் அநுபவிக்கப்பட்டதென்று அருளிய ஆறாயிரப்படியாசிரியரான பிள்ளான்வழியிலே நின்று ச்லோகமிடாமல் நம்பிள்ளை திருவடிகளின் வியாக்கியானங்களை ஸேவித்து அந்த வாஸனையாலே *அகடித கடநம் ப்ராஹ* என்றருளிச்செய்த நம் தேசிகனுடைய திருவாக்கு இவ்விடத்தில் அநுபாதேயமேயென்று பலர்வாயில் கேட்டிருக்கிறோம்; அந்த விடையோ அதற்குப் பர்யாயமான விடையோ தவிர வேறு விடை அந்தகர்வாயில் வெளிவர ப்ரஸக்தியுண்டோ! உண்டெனில்அருளலாமே; அப்போது சாஸ்த்ரார்த்த மருமங்களெல்லாம் தன்னடையே வெளிவந்து தீருமே. ப்ராஸங்கிகமான விது நிற்க.

**—அந்தகரை நோக்கிச் சில கேள்விகள் கேட்டல்—**

71. பகவானுடைய ஸ்வரூபம் ஒவ்வொரு வஸ்துவிலும் நிச்சேஷமாக நிரம்பியுள்ளதென்று கொள்ளுகிறவிதில் என்ன விபத்து வந்திட்டது? பரம கிருபையுடனும் சாந்தியுடனும் விடையிறுக்கவேணும். நாம்கேட்கிற கேள்வியை நன்கு வாங்கிக் கொண்டு விடையருளவேணும். நூற்றெட்டுத் திருப்பதிகளுள்ளன. ஒவ்வொரு திருப்பதியிலுமுள்ள மூர்த்திகளொவ்வொன்றிலும் பகவானுடைய ஸ்வரூபம் நிச்சேஷமாக நிறைந்துள்ளதா இல்லையா என்று கேட்கிறோம்; மற்றவற்றில் பகவத் ஸ்வரூபம்எப்படியாவது இருக்கட்டும். ஆங்காங்கு பக்தர்களால் ஆராதிக்கப்படுகிற திருமூர்த்திகளை யெடுத்துக் கொள்வோம். இவற்றிலும் ஸ்வார்த்தயஜந மூர்த்திகளை விட்டுப் பரார்த்தயஜந மூர்த்திகளை மட்டும்கொள்வோம். இவற்றிலும் திவ்யதேசங்களில் திகழும் திருமூர்த்திகளையே கொள்வோம். அவ்வளவும் வேண்டா; கோயில் திருமலை பெருமாள் கோயில் என்று சிறப்பித்துக் குலாவப்படுகிற மூன்று திருப்பதிகளிலுள்ள திருமூர்த்திகளையே கொள்வோம். ஸ்ரீரங்கநாதனிடத்தில் (மூலமூர்த்தியில்) பகவத்ஸ்வரூபம் நிச்சேஷமாக நிரம்பியுள்ளதா இல்லையா? என்று கேட்கிறோம். திசைகள் தோறும் மருளமருள விழித்து நில்லாமே தெளிந்து நின்று விடையருளவேணும்அந்தகஸ்வாமிந்!

***பக்தஸ்யதாநவசிசோ:* என்கிற தேசிகஸூக்தி விசாரம்**

72. தேசிக ச்லோகமொன்று *பக்தஸ்ய தாநவசிசோ: பரிபாலநாய* இத்யாதி. இதில் என்னசொல்லப்படுகிற தென்னில் *எங்குமுளன் கண்ணனென்ற மகனைக் காய்ந்த இரணியன் தூணைப் புடைப்பதற்கு முன்னே எம்பெருமான் மூவுலகத்திலும் ஒவ்வொரு வஸ்துவிலும் (ஒவ்வோரிடத்திலும்) நரஸிம்ஹரூபியாக ஆவேசித்து விட்டதாகவும், இரணியன் தட்டினது ஒரு தூணையே யாதலால் அந்தவொரு தூணில் நின்று மாத்திரம் ஒரு நரஸிம்ஹமூர்த்திமட்டுமே வெளிவந்த படியால்

மற்ற ஸகல ப்ரதேசங்களிலும் ஆவேசித்த பல கோடிநூருயிரம் நரஸிம்ஹமூர்த்திகள் இன்னமும் அப்படியே வாஸஞ் செய்வதாகவும் ஸாதிக்கப்பட்டிருக்கிறது. இதை அதிவாத மென்று சொல்லிவிட்டால் ஸ்வாமிக்கு அஸாதாரணமாகவுள்ள ஏற்றம் போய்விடும். "ஆளவந்தார், பாஷ்யகாரர் முதலாளுருங்கூட அதிவாதிகளே; நம் தேசிகனொருவரே அதிவாத கதாவைதேசிகர்" என்றுசாற்றிய பறை இன்ருக அவஶ்யமடையலாகாது. ஏற்கெனவே ஆவிர்ப்பவித்த நரஸிம்ஹமூர்த்திக்கும், இற்றைக்கும் கர்ப்பவாஸம் பண்ணுகிற நரஸிம்ஹ மூர்த்திகளுக்கும் வாசியுண்டோ? என்பதையும் சேர்த்துக் கொண்டு விடையிறுக்கவேணும். இதுநிற்க. ஒரு ஶ்ரீரங்கநாதனிடத்திலேயே பகவத் ஸ்வரூபமடங்கலும் அடங்கி விட்டால் மற்றும் திருமலை பெருமாள் கோயிலிலுள்ள மூர்த்திகளிலும் வியாபிப்பதற்கு ஸ்வரூபமில்லாமையாலே ஶ்ரீரங்கநாத மூர்த்தியில் பகவத்ஸ்வரூபத்தின் ஸ்வல்ப பாகந்தான் உள்ள தென்று உரைக்கவேணும். எந்தத் திருமூர்த்தியைப்பற்றிக் கேட்டாலும் இப்படியே தான் விடையிறுக்க வேண்டியது விதியாயிற்று. யாருக்கு? பகவத்சக்திவித்வேஷிகளுக்கு. பகவத் ஸ்வரூபம் அரை குறையாக இருக்கப் பெற்ற மூர்த்திகளையே இவர்கள் தொழுதுவருவதாகத் தேறிநின்றது.

### —நியாயஸித்தாஞ்ஜந ரஹஸ்யத்ரயஸாரயோ: ப்ரத்யக்ஷ விரோதம்.—

73. ஸ்வரூபம் அரை குறையாக இருந்தாலும் ஒவ்வோரிடத்திலும் பரிபூர்ண சக்திக்கு அணுமாத்திரமும் குறையே கிடையாதென்று நாங்கள் இசைகிருேமேயென்றுஇவர்கள் சொல்லக்கூடும்.இது அர்த்தமில்லாத வார்த்தை;வ்யாப்தனுக்கு ப்ரதிவஸ்துபூர்ணத்வத்தைச் சொல்லுகிற வைதிகர்கள் யாவர்க்கும் ஒரேவிதமான அபிப்ராயமே என்னலாம்;அதாவது ஓரொரு உபாத்ய வச்சிந்ந ப்ரதேசமே ஸர்வத்தையும் நிர்வஹிக்கவல்ல சக்தியுடைத்தாயிருக்கை யென்பதே. நிரூபகர்கள் இவ்வளவு மட்டுமேயெழுதி விட்டுநின்ருல் வெகு அழகாக இருந்திருக்கும். ந்யாயஸித்தாஞ்ஜந ஶ்ரீஸூக்தியோடும் மிக விணங்கியிருக்கும். ஒருவர்க்கும் ஒன்று சொல்ல வாயெழாது. ''வஸ்துதோறும் ஸ்வரூப ஸமாப்தியென்று கொண்டால் மற்ருேரிடத்தில் வியாபிப்பதற்குவஸ்து வில்லையாகும்'' என்று தூஷணம் கொடுப்பதுண்டே இதுதான் வெகு ஆச்சரியம். ''வ்யாப்தனுக்கு ப்ரதிவஸ்து பூர்ணத்வமாவது வஸ்து தோறும் ஸ்வரூபஸமாப்திதான்; அதாவது ஓரொரு உபாத்யவச்சிந்ந ப்ரதேசமே ஸர்வத்தையும் நிர்வஹிக்கவல்ல சக்தியுடைத்தாயிருக்கை'' என்று எழுதிவைத்தால் எவ்வளவு அழகாயிருந்திருக்கும். ந்யாயஸித்தாஞ்ஜந ஶ்ரீஸூக்தியோடு விரோதம்விளையாமலிருப்பது முதல் லாபமாகுமென்பதை மீண்டுமீண்டு முரைப்போம்.

### —நியாயஸித்தாஞ்ஜன ஸித்தாந்தத்தின் தெளிவு.—

74. ''ந்யாயஸித்தாஞ்ஜநத்திலும் வஸ்து தோறும் பரிஸமாப்தியை இசையவேயில்லை" என்கிற மருளை அறவேவிட்டொழிக்கவேண்டும். அந்த திவ்யக்ரந்தத்தில் ''சதஸ்ருஷு ச மூர்த்திஷு பரிபூர்ண ஏவேச்வர:; ...ஏவமேவ ஸர்வத்ராபி பூர்ண ஏவ.'' என்றருளிச் செய்துவிட்டு உடனே "அந்யத்ர வித்யமாநஸ்ய அந்யத்ர பூர்ணத்வம் நஸ்யாத் இதிசேத்" என்கிற ஶ்ரீஸூக்தியுள்ளது. இந்த ஸூக்திக்கு உதயம் எப்படி?என்பதொன்றையே விவேகிகள் விமர்சிக்கவேணும்.(இதிசேத்)என்ற இந்த ஆசங்கைக்கு ஸமாதானம் எதுவாயினுமாகுக. அதைப்பற்றி விசாரமேயில்லை. *ஸர்வத்ராபி பூர்ண ஏவ* என்று ஸாதித்தவுடனே "வேறிடங்களிலுமிருக்கின்ற ஈச்வரன் ஒரே யிடத்தில் எப்படி பூர்ணனுயிருக்கமுடியும்?'' என்று ஒருவன் ஆக்ஷேபிப்பதாக எழுதப்பட்டிருக்கிறதே, கீழ்வாக்யத்திலிருந்து தானே இந்த ஆக்ஷேபம் உதிக்க வேண்டும். இங்ஙனே ஆக்ஷேபிக்கவேண்டும்படியான விஷயமே கீழ்வாக்யத்தில் சொல்லி முடிக்கப்பட்டிருக்கிறதென்பது கைகொள்கனியாகக் காண்கிறதே.

—சாகுந்தல நாடகத்தில் ஓர் அதிசயம் காட்டுதல்—

75. சாகுந்தல நாடகத்தின் முடிவில் மஹாகவி ஒரு வாக்விநோதம் காட்டியுள்ளார்; அதைச் சுருக்கமாக நினைப்பூட்டுகிறோம்; குழந்தையான துஷ்யந்தகுமாரனெதிரில் ஒருத்தி ஒரு பதுமைப் பறவையைக் கொண்டுகாட்டி ''ஸர்வதமந! சகுந்தலாவண்யம் பச்ய'' [குழந்தாய்! இந்த பக்ஷியின் அழகைப்பார்] என்று சொன்னவளவிலே, 'அப்படியா? என் தாயான சகுந்தலையா? எங்கே? என்றதாம் அக்குழந்தை. சகுந்தமென்று பக்ஷிக்குப் பெயராகையாலே 'சகுந்தத்தினுடைய லாவண்யத்தைப் பார்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. குழந்தையானது (சகுந்த) என்றும் (லாவண்யம்) என்றும் கொள்ளாமல் (சகுந்தலா ...) என்று தன் தாயின் பெயரை ப்ரஸ்தாவித்ததாகக் கொண்டு சகுந்தலை எங்கே? என்று கேட்டதாக அமைப்பு உள்ளது. இங்கு 'சகுந்தலாவண்யம்' என்று சொல்லாமல் ''விஹங்கம லாவண்யம்'' என்றோ 'பக்ஷிலாவண்யம்' என்றோ சொல்லியிருந்தால் அப்போது குழந்தை என் தாய் எங்கே? என்று கேட்பதற்கு ப்ரஸக்தியுண்டோ? இது கவிதானுக வைத்தவொரு சமத்காரம். அப்படி ஏதேனும் இங்கு விசித்ரவாக்கின் அமைப்பு உள்ளதோ?ருஜுவான வாக்கேயுள்ளது. ''ஸர்வத்ராபி பூர்ண ஏவ'' என்று ஸாதித்த ஸ்வாமியின் திருவுள்ளத்தில் 'அந்யத்ர வித்யமாநஸ்ய அந்யத்ர பூர்ணத்வம் கதம் பவேத்?' என்று சங்கிப்பதற்கு உறுப்பான அர்த்தமே உறைந்துகிடந்ததென்பது அசைக்கமுடியாதபடி தேறிவிட்டது. அந்த பூர்ணத்வந்தான் வஸ்து தோறும் ஸ்வரூப ஸமாப்தியென்பது, கடைசியாக இவ்விஷயத்தை முடிக்குமளவிலும் வேறொரு சப்தத்தையிட்டு முடிக்காமல் ''யதாகமம் ஸர்வத்ர பூர்ண ஏவ பகவாந்'' என்று முதல்முதலிலெடுத்த பூர்ணசப்தத்தையே யிட்டு முடித்தார். இவ்விடத்தில் *க்ருத்ஸ்நப்ரஸக்திரித்யாதிபூர்வபக்ஷ ஸூத்ரத்தையும் *ச்ருதேஸ்து* என்கிற ஸித்தாந்த ஸூத்ரத்தையும் எடுத்துக் காட்டி இதைத் தஞ்சமாகக் கொண்டன்றோ விவாத விஷயம் உபஸம்ஹரிக்கப்பட்டது. பிறர் சொல்லுகிறபடி ஸ்வாமிக்குத் திருவுள்ளமாயிருந்தால் இங்கு இந்த ஸூத்ர-உதாஹரணம் ஸர்வாத்மநா அப்ரஸக்தமாகுமே.

—உயிரிழந்ததற்கு உயிர்ப்பிச்சையளிக்க முடியாதே-

76. லோகவிஸஜாதீயமான அத்புதசக்திவாய்ந்த பரம புருஷனிடத்திலே 'இது எப்படி ஸம்பவிக்கும்? அது எப்படி ஸம்பவிக்கும்? என்று வாயைத் திறவாதே என்றன்றோ ஸூத்ரகாரர்: முடித்திட்டது. அது தானே இங்கு ஸ்வாமியின் முடிவுக்குக் கைகொடுத்தது. அகடிதகடநாசக்தன் பக்கலிலே கூடாததொன்றில்லையென்று கூறிவைத்தவர் தாமே ரஹஸ்ய த்ரயஸாரத்தில் இந்த சக்திக்குக் கண்ணழிவு கூற நேர்ந்த தென்றால், இந்தப் பொற்றலையடைக்க மூவுலகும் திரண்டாலும் செய்யலாவதில்லையே. கைதேர்ந்த ஆயிரம் மருத்துவர்கள் ஒன்று கூடித் திரண்டுருண்டு வந்தாலும் உயிரிழந்து போனவற்கு உயிர்ப்பிச்சை யளிக்க முடியுமாவென்பதையும் உணரகில்லாரந்தோ இம்மஹாமேதாவியந்தகர்.

—ச்ருதப்ரகாசிகையில் காட்டின அற்புதத் தெளிவு,—

77. ச்ருதப்ரகாசிகா விஷயம்இனிவிளக்குவோம். உபநிஷத்து *யஆத்மநி திஷ்டந்* என்றவளவோடு நில்லாமல் *ஆத்மநः அந்தரः* என்றும் ஓதிற்று. இது அவசியமோ ?*ஆத்மநி திஷ்டந்* என்றவளவே போராதோ? என்று சங்கை தோன்றக் கூடியது. இதற்கு ஜிஜ்ஞாஸாதிகரண ச்ருதப்ரகாசிகையில் ''வேத்யாம் அக்நிஸ் திஷ்டதி, திலே தைலம் திஷ்டதி'' என்ற இரண்டு வாக்கியங்களை யெடுத்துக் காட்டித் தெளிவு பெறுத்தியிருப்பது பிறர்க்கு நிலமன்றே. 'எள்ளில் எண்ணெய் இருக்கிறது' என்றால் எண்ணெயானது எள்ளினுள்ளேயிருப்பது சொல்லிற்றாகுமே யல்லது வெளியிலுமிருப்பதாகச் சொல்லிற்றாகாது. 'திண்ணையில் தீ இருக்கிறது'

என்ருல் தீ திண்ணையின் மேலிருப்பது சொல்லிற்ருகுமேயல்லது உள்ளிலுமிருப்பதாகச் சொல்லிற்ருகாது. ஆத்மநி பரமாத்மந: ஸ்திதியோ வென்னில் உள்ளும் புறம்பு மொக்கவாயிற்று; திலத்தில் தைலமிருப்பது போலவும் வ்யாப்தி; வேதியில் அக்நியிருப்பது போலவும் வ்யாப்தி; இப்படிப்பட்ட விலக்ஷண வ்யாப்தியை விளங்கக் காட்டுவதற்கே ச்ருதி *ஆத்மநி திஷ்டந், ஆத்மந: அந்தர:* என்று இரண்டு படியாகவும் ஓதிற்று—என்று ச்ருதப்ரகாசிகையில் விவரணமுள்ளது. அணுவஸ்துவிலும் அந்தர் வ்யாப்தி விஷயம் நிஷ்கல்மஷமாய் முடிவு பெற்றது.

—ஜாதி வ்யக்திதோறும் பரிஸமாப்யவர்த்திப்பதுபற்றி.—

78 இனி, பரிஸமாப்ய வர்த்தித்வத்தைப்பற்றி ச்ருதப்ரகாசிகாசார்யருடைய திருவுள்ளமும் எமது நூல்களில் பலகால் நிரூபிக்கப் பட்டுள்ளது. அதற்கு இதுகாறும் விடைகூறிஞ ரொருவருமில்லே. இங்கு அதனைச் சுருங்க உபபாதிக்கிருேம். இதற்கு அவதாரிகையாகச் சில வார்த்தைகள் அவசியமாகின்றன. இவ்விஷயத்தில் நம்மோடு ப்ரதிவாதம் செய்த ஸ்ரீமத்கோழியாலம் ஸ்வாமி விச்ராந்தரான பிறகு கிளர்ந்த D T அவர்களெழுதி வெளியிட்ட ஸர்வசக்திச் சுவடியில், ஜயந்தபட்டன்—பார்த்தஸாரதி மிச்ரர்—சாலிக நாதன் என்கிற பெயர்களே மகுடமாக வைத்துச் சிலசில வரிகள் வரையப்பட்டுள்ளன. இந்த பரிச்ரமம் எதற்காகக் கொள்ளப்பட்ட தென்ருல் "ஜாதி வ்யக்திதோறும் பரிஸமாப்ய வர்த்திக்குமா போலே எல்லாவற்றிலும் தனித் தனியே குறைவற வியாபித்து நிற்கும்" என்றும், 'ஜாதி வ்யக்திதோறும் பரிஸமாப்ய வர்த்திக்கிற தென்ருல் அசேதநத்துக்கு இது கூடு மென்றிருப்பர்கள்; பரமசேதநனுய் ஸர்வ சக்தியானவன் இங்ஙனே வர்த்திக்கிருனென்ருல் இதில் விப்ரதிபத்தி பண்ணிப் போருவர்கள்" என்றும் ஈட்டில் அருளிச் செய்தவற்றை நாம் எடுத்துக்காட்ட நேர்ந்தபோது இவரைப் போன்றவர்கள் "நாம் ஜாதியை ஒப்புக்கொள்ளாதவர்க ளாகையாலே ஜாதியை திருஷ்டாந்தீகரித்து இவ்விஷயத்தைச் சொல்லுவதே தகுதியற்றது" என்ருர்கள். அதன்மேல் நாம் 'யதா ஜாதிவாதிநோ ஜாதிரேகைவ அமூர்த்த அகண்டமுண்டாதிஷு அத்யந்த விலக்ஷணேஷு அநந்தேஷ்வபி பரிஸமாப்யைவ வர்த்ததே, ந தத்ர இதரவஸ்து சோத்யமிதி" என்றுள்ள வேதாந்ததீப ஸ்ரீஸூக்தியை யெடுத்துக் காட்டினேம். அதன் பிறகு திகைத்து நின்றவர்களிவர்கள். இந்த ஸ்ரீ ஸூக்தியானதுஇவர்களுடைய குசோத்யங்களே யெல்லாம் வேரறுக்கு மது. இதை இவர்கள்மேல் வஜ்ரபாதா சநி ஸந்நிபாதமாக நாமெடுத்துக் காட்டின பிறகு இந்த ஸ்ரீ ஸூக்தியை D. T. அவர் தமதுசுவடியில் பரமகம்பீரமாக உதாஹரித்தார் "பகவத் ராமாநுஜன் தீப க்ரந்தத்தில் ஸ்பஷ்டமாக ஸாதித்தார்" என்று உதட்டின்கீழ்த் தேஞெழுக எழுதிஞர். வர்ஷ ஸஹஸ்ரம் போராடிஞலும் இந்த ஸ்ரீ ஸூக்தி இவர்களுக்கு வஜ்ரகுடாரமேயென்பது அசைக்க முடியாதது. சோத்யம் பண்ண வாயைத்திறவாதே என்று ஸ்பஷ்ட மாகச் சொல்லியிருக்கச் செய்தேயும் "ஒரு வ்யக்தியினுள்ளே பரிஸமாப்ய வர்த்தித்தால் அந்யத்ர வ்யாப்தி எப்படி கூடும்" என்று இந்த ஆக்ஷேபமொன்று தானே இவர்களிடம் நிற்கிறது. இந்த ஆக்ஷேபத்தைச் செய்யாமல் அர்த்த பரிஷ்காரத்தை எங்ஙனே செய்தாலும் அழகியதே யென்று நாமும் பல பல கால் அறைகின்ருேம். தைவதுர் விபாகாத் இந்த ஆக்ஷேபத்தை மறைத்திட முடியவில்லே யிவர்களுக்கு. எதைச் சொல்லி உய்வோ மென்று தடு மாறுகின்ருர்கள். ஜாதியைப் பற்றிப் பிறர் என்ன சொல்லுகிருர்களென்று பார்க்கிருர்கள். எதைப்பார்த்தாலும் இவர்களுக்கு அநர்த்தமாகவேயுள்ளது. அதையும் தாங்களே வெளியிட்டுக் கொள்ளுகிருர்களே, இதுவும் ஒரு விசித்திரம்.

—இவர்களெடுக்கிற ஜயந்தபட்டாசார் கூறுவது.—

79 ஜயந்த பட்டன் என்ற தலேப்பின் கீழ் D. T. எழுதியுள்ள விஷயம் தங்களுக்கு என்ன உபகாரகமோ அறியோம். "ஜாதியைப் பரிஸமாப்யவர்த்தியென்கிறீரே, ஒரு வ்யக்தியிலேயே முடிந்து நிற்பதையன்ருே பரிஸமாப்யவர்த்தி யென்பது; மற்றும்

பலபல வ்யக்திகளிலு மிருக்கிறவிதனை ஒரு வ்யக்தியில் பரிஸமாப்யவர்த்தி யாக எப்படிச் சொல்லுகிறீர்?'' என்று கேட்பவர்களுக்கு ஜயந்த பட்டாசார் என்ன மறு மொழி கூறுகின்றார்? அவர் சொல்லுவதிவ்வளவே; 'என்னைக் கேட்டால் நானென்ன சொல்வது? பரிஸமாப்யவர்த்தி யென்று சொல்லித் திரவேண்டியதா யிருக்கிறது; அது மற்ற வ்யக்திகளிலும் காணப்படுகிறதே யென்கிறாயோ ஆமாம் காணப்படுகிறது. அதை இல்லை செய்ய யாரால் முடியும்? அதையும் வேண்டியதே, இதையும் இசைய வேண்டியதே' என்பதாம். இவ்விதமாகவோ-இதைவிட அதிகமாகவோ பகவான்விஷயத்தில் பேசவேண்டியிருக்க, இவர்கள் என்ன பேசுகிறார்களென்பதை விவேகிகள் நோக்கவேண்டுமே. ப்ரஹ்ம ஸ்வரூபம் ஒன்றில் பரிஸமாப்யவர்த்தித்தால் மற்றொன்றில் அது காணமுடியாதென்றே இன்னமுங் கூறுகிற இவர்களின் பிடிவாதம் ஊமனார் கண்ட கனவிலும் பழுதாயொழிந்ததென்று முடியவில்லையா? பகவானை ஸ்பர்சியாத இதரர்களின் பேச்சு ஒரு புறமிருக்க, ப்ரஹ்மவாதிகளில் தலைவரான ச்ருத ப்ரகாசிகாசார்யருடைய ஸ்ரீஸூக்தியன்றோ நமக்குத்தலைமேலது. வேதார்த்த ஸங்க்ரஹ விவரணத்தில் 'ஏகஸ்மிந்நேவ வஸ்துநி ஸ்வரூபஸ்ய பூர்ணவ்ருத்திதயா அந்யத்ர வ்ருத்த்யயோக்யத்வ சங்காவ்யுதாஸார்த்தம்' என்றுள்ள ஸ்ரீ ஸூக்தியானது இவர்கள் கூறும் அல்பமான ஆக்ஷேபத்தைப் பல யோஜனைதூரத் தளவில் கொண்டு தள்ளவில்லையா? ''ஏகஸ்மிந்நேவ வஸ்துநி ஸ்வரூபஸ்ய பூர்ணவ்ருத்திதயா'' என்ற வாக்யமானது பரப்ரஹ்ம ஸ்வரூபம் வஸ்து தோறும் பூர்ணவ்ருத்தியென்று திடப்படுத்திற்று; அடுத்ததான *அந்யத்ர வ்ருத்தி அயோக்யத்வசங்கா வ்யுதாஸ* என்றதானது பஹிர்வ்யாப்திக்கு விருத்தமாமென்று வாயெடுக்கவுமாகாதென்று தடுத்தது. இந்த மருமம் இவர்களது நெஞ்சிற்படாமலில்லை; பட்டும் பயனில்லையே. 'சட்டி சுட்டது, கைவிட்டது' என்று விட்டுத் தொலைக்க விதியில்லையே.

## —மூன்றாவது ஆஹ்நிகத்தின் முடிவுரை.

இந்த வ்யாப்தி விஷயத்தில் ப்ரஹ்மவ்யாப்திபரிஷ்க்ரியா என்கிற ஸம்ஸ்க்ருத நூலை நாம் வெளியிட்டு முப்பது வருஷமாகிறது. அது யாரை நோக்கி வெளியிடப்பட்டது? அதற்கு யார் பதிலுரைக்கவேண்டியவர்? என்பதை வித்வான்கள் மறந்திருக்கமாட்டார்கள். வைகுண்டவாஸியான ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமியின் பூர்ணத்வ விசாரமென்கிற சிறு சுவடிக்கு மறுப்பாக வெளியிடப்பட்டது. ஆனால் அந்த மஹான் உண்மைதெளிந்து வாளாவிருந்திட்டார். அவருக்குப் பிரதிநிதிகளாகப் பலர் எழுதப் புறப்பட்டார்கள். ஒவ்வொருவர்க்கும் நாம் உடனுக்குடனே உத்தர முரைத்தே வந்தோம். அவரவர்கள் மறுபடியும் தாங்கள் வாய்திறவாமல் வேறொருவரை யெழுப்பி ஏவினார்கள். D. T. தாதாசாரியரவர் தாம் கிளம்பி ஸர்வசக்தியென்றொன்று எழுதினார். அதற்கு, அடுத்தவாரத்திலேயே அத்புதசக்தியென்னும் நூலை வெளியிட்டோம். அது1948ல். அதைப்பெற்றுக் கொண்டு அவர் ஒய்ந்தார். இவ்வந்தகர் இப்போது கிளம்பியுள்ளார். ஏற்கெனவே நமது நூல்களில் வெளிவந்துள்ள ஆக்ஷேபஸமாதானங்களில் ஒன்றிலும் இவர் கண்செலுத்தினவரல்லர். ஸர்வசக்திச் சுவடியை யெழுதிவெளியிட்ட தாதாசாரியரை வாய்மாளப்பண்ணின நமது அத்புத சக்திநூலில் இவ்வந்தகருடைய வாக்ப்ரதிக்ஷேபங்களும்பலவுள்ளன. அவற்றுக்கு இப்போதும் இவர்வாய்திறந்திலர். இவருடைய நாடகம் முடிந்தபின்இன்னுஞ் சிலவாண்டுகள் கழித்து வேறொருவர் *சுக்லாம்பரதரம்விஷ்ணுமென்று தொடங்குவர்; தொடங்குவரென்று சோதிடமென்ன? தொடங்கப் போகிறார். நாம் வாழ்நாளுள்ளவளவும் விடையளித்து வருவோம். ...............

ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யத்தில் மூன்றாவது
ஆஹ்னிகம் முற்றிற்று

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# பகவத்கீதை யறுபத்திரண்டு.

[ஸ்ரீகாஞ்சி, ப்ர. அண்ணங்கராசார்யர்.]

द्विषष्टितमहायनव्यपगमस्य लक्ष्मास्त्विति द्विषष्टिविषयावली विलसिता कृतीर्भूयसीः।
व्यलेखिषमुदारधीविलसितात्मनां शासनात् प्रकाशमिह नीयते प्रथमजा कृतिस्तत्र च ॥

1. ஸர்வேச்வரன் உபயவிபூதிநாதனென்று கொண்டாடப்படுகிறான். லீலாவிபூதியும் நித்யவிபூதியுமாகிய மண்ணுலகும் விண்ணுலகும் உபய விபூதிகளெனப்படும். *அருளார் திருச்சக்கரத்தால் அகல் விசும்பும் நிலனும் இருளார் வினைகெடச் செங்கோல் நடாவுதிர்* என்று (திருவிருத்தத்தில்) நம்மாழ்வாரும், * பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமே யாள்கின்றவெம் பெருமான் * என்று (நாச்சியார் திருமொழியில்) ஆண்டாளும் எம்பெருமானுடைய உபயவிபூதி நிர்வாஹகத்வத்தைப் பற்றிப் பேசின பாசுரங்கள் அறியத்தக்கன. நித்யவிபூதிக்கு எதிராயிருக்கின்ற இந்த லீலாவிபூதியை மாஞானிகள் 'இருள் தருமாஞாலம்' என்று வழங்குகிறார்கள். இம்மண்ணுலகம் இருளே மலிந்ததென்று சொல்லப்படுகிறது. ஸூர்யன் சந்திரன் அக்னி முதலிய சுடர்ப்பொருள்களால் போக்க முடியாத அகவிருள் [அஜ்ஞாநாந்தகாரம்] இங்கு இருளெனப்படுகிறது. "अन्धं तम इवाज्ञानम्— அந்தம் தம இவாஜ்ஞாநம்" என்று ஸ்ரீபராசரமஹர்ஷியும் சொல்லிவைத்தார்.

2. இப்படிப்பட்ட அகவிருளை அகற்றுவதற்காகப் பேரருளாளனான எம்பெருமான் * கலைகளும் வேதமும் நீதிநூலும் கற்பமும் சொற்பொருள்தானும் மற்றை நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினாலருள் செய்து * என்று திருமங்கையாழ்வாரருளிச் செய்தபடியே ச்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராணாதிகளான நாநாசாஸ்த்ரங்களை யுபகரித்தருளினான். அப்படி உபகரித்தவிடத்தில் ஸத்வாரகமாகப் பலநூல்களையும் அத்வாரகமாகச் சில நூல்களையும் இவ்வுலகில் அவதரிப்பித்தருளினன். வ்யாஸபராசர வால்மீகி ப்ரப்ருதிகளான மஹர்ஷிகளை த்வாரமாகக் கொண்டு அவர்கள் வாயிலாக வெளியிட்டவை ஸத்வாரகமெனப்படும். அப்படியன்றிக்கே தானே ஸாக்ஷாத்தாக வெளியிட்டவை அத்வாரகமெனப்படும். இப்படிப்பட்ட அத்வாரக சாஸ்த்ரங்களுள் பகவத்கீதாசாஸ்த்ரமென்பது தலைசிறந்து விளங்குகின்றது.

3. * वेदेषु पौरुषं सूक्तं धर्मशास्त्रेषु मानवम्। भारते भगवद्गीता पुराणेषु च वैष्णवम्— வேதேஷு பௌருஷம் ஸூக்தம் தர்மசாஸ்த்ரேஷு மாநவம், பாரதே பகவத்கீதா புராணேஷு ச வைஷ்ணவம் * வேதங்களுக்குள்ளே புருஷஸூக்தமும், தர்மசாஸ்த்ரங்களுக்குள்ளே மநுஸ்ம்ருதியும், மஹாபாரதத்திற்குள்ளே ஸ்ரீ கீதையும், புராணங்களுக்குள்ளே ஸ்ரீ விஷ்ணுபுராணமும் சிறந்தவை யென்று சொல்லிற்று. பஞ்சமவேதமாகப் புகழப் படுகின்ற மஹாபாரதத்தினுள்ளே கீதோபநிஷத்தென்று குலாவப்

படுகின்ற பகவத்கீதையானது பெரும்பாலும் ஸகலமதஸ்தர்களாலும் உச்சிமேல் வைத்து மெச்சப்படுகின்றதென்பது உலகமறிந்தது. உபநிஷத்துக்களின் அரிய பெரிய பொருள்களெல்லாம் இதுதன்னில் அடங்கிக் கிடக்கின்றமையால் எப்படிப் பட்ட பண்டிதர்களுக்கும் வியாக்கியானங்களின் உதவியின்றி இதன் பொருள் அறிய முடியாததாயிருக்கும். ஆனதுபற்றியே பலபல மஹான்களும் மஹாசார்யர்களும் மேதாவிகளும் இதற்கு அனேக வியாக்கியானங்கள் இயற்றியுள்ளார்கள். மூலத்தின் மேல் ப்ரதிபதவியாக்கியானமாகவும் பொழிப்புரையாகவும், கருத்துரையாகவும், உபந்யாஸ ரூபமாகவும், ஆராய்ச்சி யுருவமாகவும் மற்றும் பலவிதமாகவும் கீதைக்கு அமைந்திருக்கின்ற விவரணங்கள் எண்ணுதற்கரியன. இவை இரண்டொரு பாஷை களிலல்ல; ஐந்தாறு பாஷைகளிலுமல்ல; உலகில் எத்தனை பாஷைகள் நடையாடு கின்றனவோ, அத்தனை பாஷைகளிலும் தோன்றியுள்ளன. இது கொண்டே இதன் ஒப்புயர்வற்ற மஹிமை அறியற்பாலது.

4. எத்தனை வியாக்கியானங்கள் அவதரித்திருந்தாலும் 'மதத்ரய பாஷ்யம்' என்று ப்ரஸித்தமாக வழங்கப் பட்டு வருகின்ற மூன்று பாஷ்யங்களே வைதிகவுலகில் அதிகமான ப்ரஸித்தியை யடைந்திருக்கின்றன. வட இந்தியாவில் வல்லபமதத்திற்கு அதிகப்ரசாரம் காண்பதனால் ஆங்கே வல்லபாசார்ய வியாக்கியானமும் சிறந்ததாகக் குலாவப்படும். நமது நாட்டில் சங்கராசார்யரியற்றிய அத்வைதபரமான பாஷ்யமும், ஸ்வாமி யெம்பெருமானாரியற்றியருளின விசிஷ்டாத்வைதபரமான பாஷ்யமும், ஸ்ரீமத் ஆனந்த தீர்த்த ரென்னும் மத்வாசார்யரியற்றிய த்வைத பரமான பாஷ்யமும் இவற்றுக்கு சிஷ்யகோடிகள் இயற்றிய டீகைகளும் ப்ரஸித்திபெற்று விளங்குகின் றன. பகவத்ராமாநுஜர் அருளிச் செய்த பாஷ்யமும் அதற்கு வேதாந்த தேசிகனரு ளிய தாத்பர்யசந்த்ரிகை யென்னும் டீகையும் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் மிக வுயர்ந்த ஸ்தானத்தை யலங்கரித்து வருகின்றன.

5. மதத்ரய பாஷ்யங்களென்று குலாவப்படுகின்ற மேலே குறித்த மூன்று பாஷ்யங்களும் ஸம்க்ஷேபமான முறையில் அவதரித்தவை யெனினும், மத்வாசார்ய பாஷ்யமானது மிகவும் ஸம்க்ஷிப்தமாகத் தோன்றியது. சங்கராசார்ய பாஷ்யமானது அதைவிட சிறிது விரிவாகத் தோன்றியது. பகவத் ராமாநுஜ பாஷ்யமானது ஆவச் யக விஷயங்களைச் சிறிதும் விடாமலும் அநாவச்யக விஷயங்களை அடியோடு ஏற்றுக் கொள்ளாமலும் பரம போக்யமான பத்ததியில் அவதரித்துள்ளது. உலகில் அவரவர்கள் தம்தம் ஸம்பிரதாய நூல்களைப் புகழப் பிறந்தவர்களாதலால் அதற்குச் சேர நாம் பகவத் ராமாநுஜ பாஷ்யத்தை ப்ரசம்ஸிப்பதாகச் சிலர் நினைக்கவுங்கூடும். வஸ்து ஸ்திதியில், எந்த மதத்தைச் சேர்ந்தவரும் பகவத் ராமாநுஜ பாஷ்யத்தைக் கண்டு ஈடுபடுவதை நாம் காண்கிறோம். மூலத்திலுள்ள ஒரு பதத்திற்கும் அர்த்தம் செய்வதை விடாமலும் பொருத்தமான அந்வயக்ரமங்களையும் அர்த்தங்களையும் காட் டியும் அருளிச்செய்யப்பட்ட பாஷ்யம் இஃதொன்றே யென்று நாம் கூசாமல் கூற லாம். இது அபிமானத்தினால் சொல்லப்படுகிற வார்த்தை யென்று பிறர் நினைத்தா லும் நினைத்திடுக. விவேகிகளான யாவருடைய மனமும் ஒருங்கே இசையக்கூடிய வார்த்தையே இது என்பது வஸ்துஸ்திதி.

6. அடியேன் ஒரு ஸமயம் இம்மூன்று பாஷ்யங்களையும் டீகைகளுடனும் பூர்த்தியாக ஸேவிக்கவும் ஆராய்ச்சி செய்யவும் ப்ராப்தமாயிற்று. அப்போது பகவத் ராமாநுஜ பாஷ்யத்தை தாத்பர்ய சந்த்ரிகையுடன் ஆர அமர அநுபவிக்க நேர்ந்தது. அப்போதே எழுத நினைத்த இந்த வியாஸம் பகவத் ஸங்கல்ப விசேஷத்தினால் இப்போதெழுத ப்ராப்தமாகிறது. இதற்கு முன்பும் ஸமய விசேஷங்களில் அடியேனெழுதியுள்ள பலவகைப்பட்ட வியாஸங்களில் கீதைக்கு ஸம்பந்தப் பட்டதாக எழுதியுள்ள விஷயங்களைப் பெரும்பாலும் இதில் சேர்த்துக் கொள்வேன். மிக விரிவாக எழுத வேண்டிய பலபல விஷயங்கள் நெஞ்சில் தோன்றி யிருந்தாலும், வாசகர்கள் எளிதாக வாசித்து உணர்ந்து இன்புறவேணு மென்னும் நோக்கத்தினால் அதிகஸம்க்ஷேபவிஸ்தரங்களின்றி யெழுதுகிறேன். ஒவ்வொரு க்ரந்தத்திற்கும் அவதாரிகையுண்டு. ஆனால் அந்த அவதாரிகையானது பெரும்பாலும் வியாக்கியானகாரர்களால் விவரிக்கப் படும். அது மூலக்ரந்தத்தில் இல்லாமலிருக்கும். திருவாய்மொழிக்கு முதல் ச்ரிய:பதியென்றும் இரண்டாம் ச்ரிய:பதியென்றும் மூன்றும் ச்ரிய:பதியென்றும் அவதரித்துள்ள அவதாரிகைகள் வியாக்கியான காரர்களினால் அமைக்கப்பட்டவையேயன்றி மூலமான திருவாய்மொழியில் அவதாரிகையாக ஓரக்ஷரமும் கிடையாது. கீதையில் அப்படியன்றிக்கே முதலத்யாயம் முழுதும் அவதாரிகையாகவே தோன்றியுள்ளது. 'இந்த நூல் எதற்காக அவதரிக்கின்றது' என்பதை விசதமாக நிரூபிப்பதுதானே அவதாரிகை. அதனை நாம் பிறர் வாயினால் தெரிந்துகொள்ள வேண்டாமல் கீதையைக் கொண்டே நன்கு தெரிந்து கொள்ளுகிறோமாதலால் இதற்கு அவதாரிகையும் இதிலேயே பொருந்தியிருக்கிறதென்று சொல்லத் தட்டில்லை.

7. கண்ணபிரான் பாண்டவர்கட்காகத் துரியோதனாதியரிடம் தூதுசென்று ஸமாதான வழிகள் பல பேசியும் "வீரபோக்யா வஸுந்தரா" ஆகையாலே போர்க்களத்தில் வீரத்தனத்தைக் காட்டி வெற்றி பெறுமவர்களே ராஜ்யமாளக் கடவர்கள் என்று த்ருதராஷ்ட்ர வகுப்பினர் கூற, பிறகு யுத்தமே நடத்தக் கடவதாக முடிவு பெற்றது. இருவகுப்பினரும் படைத்துணை வேண்டிக் கண்ணபிரான் பக்கலிலே வந்தார்கள். துரியோதனன் கண்ணபிரானைத் துணையாக விரும்பவில்லை. * कृष्णाश्रयाः कृष्णबलाः कृष्णनाथाश्च पाण्डवाः — க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாச்ச பாண்டவா: * என்னும் புகழ் பெற்ற பாண்டவர்களுக்கே கண்ணபிரான் துணைவனாக நிற்க வேண்டிற்று. பக்த பரதந்திரனான ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மா தன்னுடைய பரமபக்தனான அர்ஜுனனுக்குத் தேர்ப்பாகனாயிருந்து கொண்டு குருக்ஷேத்திரமென்னுமிடத்தில் வந்து போர் புரிய அணிவகுத்து நின்றனன். அப்பொழுது அர்ஜுனன் கண்ணபிரானை நோக்கி 'பெருமானே! இந்தப் போரில் யான் யாருடன் போர் புரிவது தகுதியானது? துர்ப்புத்தி வாய்ந்த துரியோதனனுக்குத் துணைபுரிவதற்காக யார் யார் வந்திருக்கிறார்களென்பதை நான் கண்டு தெரிந்து கொள்ளுமாறு தேரை இரண்டு சேனைகளினிடையில் நிறுத்த வேணும்' என்று கூற, அப்படியே கண்ணபிரான் இரண்டு படைகளினிடையே தேரை நிறுத்தி 'அர்ஜுனா! இவ்விரு படைகளிலுமிருக்கின்ற போர்வீரர்களைப் பாராய்' என்றனன்.

8. அப்போது அர்ஜுனன் போர்க்களத்தில் வந்து நின்றிருக்குமவர்கள் தந்தைகளாயும் புத்திரர்களாயும் பேரன்மார்களாயும் தோழன்மார்களாயு மிருப்பது கண்டு அவர்களிடத்து இரக்கங் கொண்ட மனத்தனாய் ஸ்ரீக்ருஷ்ணனை நோக்கி 'கண்ணா! போர்புரிய ஆயத்தர்களாயிரா நின்ற இந்த உற்றுறவினரைக் காணவே எனது காண்டீவ தனுசு கையில் நின்றும் சோருகின்றது; என்னுடல் எரிகின்றது; மயிர்க்கூச்செறிகின்றது; தேஹம் நடுங்குகின்றது; நான் நிற்கமாட்டேன்; என் மனம் குழம்புகின்றது; அபசகுனங்கள் காண்கின்றன; அமர்க்களத்தில் இவ்வுறவினர்களைக் கொன்று நான் என்ன நன்மையடையப் போகிறேன்? எனக்கு யுத்தமும் வேண்டா, யுத்தத்தில் வெற்றியும் வேண்டா; இராச்சியமும் வேண்டா, இன்பமும் வேண்டா; உற்றுறவினர்களோடு கூடிக் களித்து வாழ்வதற்காகவன்றோ பொருட் செல்வம் விரும்பப்படுகின்றது; அன்னவர்களனைவரும் உடலையும் உயிரையும் செல்வத்தையும் பொருள்படுத்தாது போர்புரிய வந்து நிற்கின்றனரே. அவர்களை வென்று கொன்ற பின்பு இந்த ராஜ்யத்தினாலுண்டாகு மின்பம் யாதோ? பிறகு நான் பிழைத்திருந்துதான் என்ன பயன்? மூவுலகவின்பமும் கிடைப்பதாயிருந்தாலும் நான் இவர்களைக் கொல்லமாட்டேன். இந்த அற்ப பூமிக்காக இவர்களைக் கொல்ல நினைப்பதும் ஏலாதது. நெருப்பிட்டுக் கொல்பவர்கள், விஷமிட்டுக் கொல்பவர்கள், பிறருடைய தனங்களையும் பூமியையும் மாதரையும் கொள்ளை கொள்பவர்களான ஆததாயிகளைக் கொலை செய்வதில் குற்றமில்லையாகையாலே அப்படிப்பட்டவர்களில் தலைவர்களான இத்துரியோதனாதியர் கொலை செய்யத் தகுந்தவர்களேயானாலும் இவர்களைக் கொல்ல நான் விரும்புகின்றிலேன். இந்த பந்துக்களைக் கொன்று நான் எப்படி ஸுகமடைவேன்? க்ருஷ்ணா! ராஜ்ய ஸுகங்களுக்காக உறவினரைக் கொல்வது பெரும்பாதகமல்லவோ? ஆகையால் அஸ்த்ர சஸ்த்ரங்களை நான் பிரயோகிக்கப் போகிறதில்லை! பிரயோகியாமல் வாளா நிற்கு மென்னைத் துரியோதனாதிகள் கொன்றபோதிலும் அதனால் எனக்கு வருத்தமில்லை; அது எனக்கு க்ஷேமமேயாகும்— என்று கூறி வில்லைக் கீழே பொகட்டு வருத்தமும் கலக்கமும் மிகப் பெற்றுத் தேரிடையே உட்கார்ந்து விட்டான்; என்கிற விதுவே நாற்பத்தேழு சுலோகங்கள் கொண்ட முதலத்யாயத்தின் பிரமேயம்.

9. இப்படி அஸ்தாநே கலங்கின அர்ஜுனனுடைய கலக்கத்தைப் போக்கி அவனை யுத்தத்திலே மூட்டுவதற்காகக் கண்ணபிரான் இரண்டாமத்யாயத்திலிருந்து பல பல வுபதேசங்களைச் செய்தருள அவனும் தெளிவு பெற்று "स्थितोऽस्मि गतसंदेहः करिष्ये वचनं तव— ஸ்திதோஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யே வசனம் தவ" என்று சொல்லிப் போர் புரிய இசைந்தானென்பது கீதையின் முழுப்பொருள். இவ்விஷயத்தில் புத்திமான்கள் முக்கியமாக ஆலோசிக்கத் தக்கவை இரண்டு விஷயங்களுண்டு. யுத்தத்திற்குக் குதூஹலியாய்வந்து சேர்ந்த அர்ஜுனன் யுத்தாடம்பரம் செய்ய வேண்டியிருக்க அது செய்யாமல் தேர்ப்பாகனாயிரா நின்ற தேவனை நோக்கி உபயஸேனைகளிலுமிருக்கிற பந்துக்களை இன்னாரின்னாரென்று பார்ப்பதற்காக இந்தத் தேரைச் சிறிது முன்னே கொண்டு போய் உபயஸேனைகளின் முன்னே நிறுத்து என்றானே; இப்போது அர்ஜுனன் இப்படிச் சொல்லவேண்டிய அவசியமேயில்லை. ஏற்கெனவே இவன் தெரிந்துகொள்ளாத அம்சம் என்ன இருக்கிறது? யுத்தத்தில் எதிரிகளாக

வரப்போகிறவர்கள் அல்லது வந்திருக்கிறவர்கள் இன்னாரின்னாரென்பதை அர்ஜுனன் இதற்குமுன் தெரிந்து கொள்ளாமல் இனிமேலா தெரிந்து கொள்ளப்போகிறான் ; இல்லையே. அவர்களை யெல்லாம் வதைத்தொழிக்க வேணுமென்கிற ஊக்கங் கொண்டே போர்புரிய ஆயத்தனாய் வந்துநின்றவன் இப்போது இன்னாரின்னார் போர் புரிய வந்திருக்கிறார்களென்பதைக் கண்டறிந்து கொள்ளவேணுமென்றது சிறிதும் பொருத்தமாக இல்லையே. இது எப்படி பொருந்தும்? இது முதன்முதலாக ஆலோசிக்க வேண்டிய விஷயம். இனி மற்றொரு விஷயமாவது, யுத்தம் பண்ணமாட்டேனென்ற அர்ஜுநனை யுத்தஞ் செய்ய இசைவிக்க வேண்டியதுதானே கண்ணபிரானுக்குக் கர்த்தவ்யம் ; அதற்கு இவ்வளவு விஸ்தாரமான கீதாசாஸ்த்ரம் வேணுமோ ? ‘அப்பா ! நீ க்ஷத்ரியனாகையாலே யுத்தஞ் செய்யக் கடமைப்பட்டவனாகிறாய்’ என்கிற விவ்வளவை உபத்திகளுடன் சொன்னாற்போதும் ; இதற்கு ஒரு அத்யாயமே அதிகம். அத்தனையத்யாயங்கள் வளர்த்தியிருப்பது எதற்காக ? ; என்பது. ஆக இவ்விரண்டு விஷயங்களையும் ஆலோசித்துப் பொருத்தமான முடிவுகட்டவேண்டியது அவச்யமாயிருக்கின்றது.

10. மேலே ப்ரஸ்தாவித்த இரண்டு விஷயங்களுள் முந்தின விஷயத்திற்கு முன்னம் ஸமாதானம் தெரிவிக்கின்றோம். பகவான் ஸ்ரீ ராமாவதாரஞ்செய்து * தசவர்ஷஸஹஸ்ராணி தச வர்ஷசதாநி ச, ராமோ ராஜ்யமுபாஸித்வா * என்றபடி பதினோராயிரமாண்டு இந்நிலவுலகில் வாழ்ந்திருந்தும் ஸம்ஸாரி சேதநோஜ்ஜீவநார்த்தமாக ஒரு சாஸ்த்ரமும் இட்டருளவில்லை ; தன்னடிச் சோதிக்கு எழுந்தருளினபிறகு திருவுள்ளத்தில் இக்குறை மிகவும் தோன்றிற்று. அப்போதே திடமாக ஸங்கல்பம் செய்து கொண்டான்—அடுத்தபடி மண்ணுலகில் அவதாரம் செய்யும்போது மிகச் சிறந்ததொரு சாஸ்த்ரத்தைத் அவதரிப்பித்தே தீருவேனென்று. சாஸ்த்ரத்தை அவதரிப்பித்தலென்றால் ஓலைப்புறத்திலே எழுதிவைப்பதன்று. அப்படியெழுதி வைத்தால் மஹர்ஷிப்ரணீதங்களான இதிஹாஸபுராணாதிக்ரந்தங்கள் போலே இதுவுமொன்று என்று நினைக்கும்படியாகுமத்தனை. ஒரு உத்தமாதிகாரிக்குத் தன் திருவாக்காலே நேராக உபதேசித்து அம்முகத்தாலே உலகில் பரவ வைக்க வேணுமென்று திருவுள்ளம் பற்றியிருந்தான்.

11. ஸ்ரீவசநபூஷணத்தில் “ஜிதேந்த்ரியரில் தலைவனாய் ஆஸ்திகாக்ரேஸரனாய் * கேசவஸ்யாத்மாவென்று க்ருஷ்ணனுக்கு தாரகனாயிருக்கிற அர்ஜுநனுக்கு” என்று பிள்ளை லோகாசார்யர் புகழும்படியான பெருமைவாய்ந்த அர்ஜுனனையே உபதேசஸத்பாத்ரமாகத் திருவுள்ளம்பற்றினான் கண்ணபிரான். அரும்பெரும் பொருள்களை சிஷ்யனானவனுக்கு உபதேசிக்கலாமே யல்லது மற்றையோர்க்கு உபதேசிக்கத் தகாது. அர்ஜுனன் இப்போது நண்பனென்னும் முறையிலுள்ளானேயன்றி சிஷ்யனென்னும் முறையிலில்லை. * अतिपरिचयादवज्ञा सन्ततगमनादनादरो भवति । मलये भिल्लपुरन्ध्री चन्दनतरुकाष्ठमिन्धनं कुरुते- அதிபரிசயாதவஜ்ஞா ஸந்ததகமநாத் அநாதரோ பவதி, மலயே பில்லபுரந்த்ரீ சந்தநதருகாஷ்டமிந்தநம் குருதே. * என்று ஒரு ஸுபாஷிதமுண்டே. மலயபர்வதத்தில் வாழும் குறத்திகள் சந்தனக் கட்டைகளை விறகாக உபயோகப்படுத்திக் கொள்ளுகிறார்களாம் ; எதனாலே ? அவ்விடத்தில்

சந்தனகாஷ்டங்கள் மலிந்துகிடக்கின்றன. அவற்றோடே அவர்களுக்குப் பரிசயம் அதிகம். அதிக பரிசயமுள்ளவிடத்தில் அவஜ்ஞை தோன்றுவது இயல்வு. ஆகவே அவர்கள் சந்தனக்கட்டைகளின் பெருமையை யுணராமல் அவற்றை யிட்டுச் சமையல் செய்வதும் குளிர்காய்வது மாயிருக்கிறார்கள். அதுபோல, கண்ணன்பக்கலில் அதிக பரிசயமுள்ள அர்ஜுனனுக்கு சிஷ்யத்வமிருக்க ப்ரஸக்தியில்லையன்றே. சிஷ்யவ்ருத்தி செய்யாதவனுக்கு உபதேசிக்கக் கூடாதாதலால் இவ்வர்ஜுனனை எப்படியாவது சிஷ்யனாக்கிக்கொண்டு இவனுக்கே கீதாசாஸ்த்ரத்தை யுபதேசிக்கவேணுமென்று திருவுள்ளம் பற்றினான் கண்ணபிரான்.

12. "கண்ணபிரானே! உனக்கு நான் சிஷ்யனாயிருக்கின்றேன், எனக்குத் தத்வோபதேசம் செய்தருளவேணும்" என்று பிரார்த்திக்கும் படியாக அர்ஜுனனைச் செய்து பிறகு அவனுக்கு உபதேசிக்கவேணும். சிஷ்யத்வமென்பது எளிதாக உண்டாய்விடுமோ? *परीक्ष्य लोकान् कर्मचितान् ब्राह्मणो निर्वेदमायात्... तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत्..." இத்யாதியுபநிஷத்தின்படி நிர்வேத முண்டானாலல்லது சிஷ்யத்வ முண்டாக மாட்டாதாகையாலே அர்ஜுனனுக்கு சிஷ்யத்வ ப்ராப்திக்கு அங்கமாக நிர்வேத முண்டாகவேண்டியது அவசியமாயிற்று. அந்த நிர்வேதத்தை யுண்டாக்குவதற்கு ஸமயமெதிர்பார்த்திருக்கிறான் கண்ணபிரான்.

13. இப்பெருமான் ஸந்திபண்ணிவைப்பதாகப் புகுந்து, முடிவில் போர்செய்வதையே திடப்படுத்திக்கொண்டு, ஸமயத்தில் கீதாசாஸ்த்ரத்தையுபதேசிக்க இடம்பெறுவதற்காக அர்ஜுனனோடு ஸாமாநாதிகரண்யம் [சேர்த்தி] ஸித்திக்கும் பொருட்டு அவனுடைய தேரில் இருப்புப் பெறுவதற்குத் தேர்ப் பாகனாயிருக்க இசைந்து அவனோடும் அவனுடையாரோடுங்கூட குருக்ஷேத்திரம் வந்து சேர்ந்து, யுத்தத்தைத் தொடங்குவதற்கு முன்னே பந்துக்களைக் கண்டு மோஹிப்பதென்ன; அதனால் சோக விஷாதங்களை யடைவதென்ன ஆகிய இவற்றை யுண்டாக்கி, ஆக இவ்வளவால் சிஷ்யத்வத்திற்கு அங்கமான நிர்வேதத்தை யுண்டாக்குவதாகத் திருவுள்ளம்பற்றி, மேலே பத்தாவது அத்தியாயத்தில் *अहं सर्वस्य प्रभवो मत्तस्सर्वं प्रवर्तते– அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்தஸ் ஸர்வம் ப்ரவர்த்ததே* என்று தானே யருளிச்செய்கிறபடியே தனக்கு அஸாதாரணமாக விருக்கும் சக்தியினால்-இப்போது போர்புரிய வந்து நிற்கும் உற்ற உறவினர்களைப் பார்க்கவேணுமென்பதோராசையை அர்ஜுனனுக்கு உண்டு பண்ணினனாயிற்று.

14. இரண்டாமத்யாயத்தில் பதினோராவது ச்லோகமாகிய "अशोच्यानन्वशोचस्त्वं प्रज्ञावादांश्च भाषसे। गतासूनगतासूंश्च नानुशोचन्ति पण्डिताः– அசோச்யாந் அந்வசோசஸ்த்வம் ப்ரஜ்ஞாவாதாம்ஸ்ச பாஷஸே, கதாஸூந் அகதாஸூம்ச்ச நாநுசோசந்தி பண்டிதா:" என்கிற ச்லோகந்தான் உபதேசத்தின் உபக்ரமமாகவுள்ளது. இதற்கு முன்னே அர்ஜுனன் வாயில் "शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम्– சிஷ்யஸ் தேஹம் சாதி மாம் த்வாம் ப்ரபந்நம்" என்று வெளிவந்திருக்கிறது. 'கண்ணா! எனக்கு தர்மாதர்மங்கள் தெரியவில்லை; எனக்கு ச்ரேயஸ்ஸென்று நீ அறுதியிட்ட பொருளை எனக்கு உரைப்பாயாக. உனக்கு நான் மித்திரன் மாத்திரமல்லேன்; சிஷ்யனுமாகிறேன்;